


# நிலவும் நீயும் நானும்

கவிதை தொகுப்பு - 3

பூமியின் ஒற்றை நிலவோடு நமக்கான அனுபவங்களை சுமந்து வரும் உணர்வுகளின் தொகுப்பு

கருவெளி கலையகம் வெளியீடு | 94455 28556








**நூலின் பெயர்:** நிலவும் நீயும் நானும் (கவிதைகள்) தொகுப்பு 3 | **ஆசிரியர்** : கருவெளி ராச.மகேந்திரன் | **விலை** : 108 வது பக்கத்தை பார்க்கவும் | **வகை** : இபுத்தகம் | முதல் பதிப்பு : டிசம்பர், 2018

**Book Name :** Nilavum Neeyum Naanum (Kavithaikal) Thoguppu 3 | **Author :** Karuveli RaSa. Mahendran | **M.R.P. :** Check Page Number 108 | **Category:** EBook | First Edition : Dec, 2018

**வடிவமைப்பு மற்றும் வெளியீடு :**

ரா.மகேந்திரன், கருவெளி கலையகம், தேனி -625531

karuveli.mahendran@gmail.com | **94455 28556** | **https://www.karuveli.wordpress.com**

அனைத்து

ஜீவன்களுக்கும்

சமர்ப்பணம்

# நிலவோடு பயணிக்க

நிலவும் நிகழ்வும் உறவும்

சிகப்பு நிலா..

தேவ வேட்டை

நீயெனக்கு! நானுனக்கு!

மேகத்திற்காகாது

கவலை விடு என் நிலவே!

சொல்லாயோ என் நிலவே!

உங்களைப் பிடிக்கும்!

மதியும் அவனும் மதியும்

கடல் கடக்கும் தூதுவன்

நிலவும் நிலாவும் நானும்

கடலோடியின் நிலாக் காதல்

நிலவும் நிலாவும் நானும்

இந்த நிலா விதிவிலக்கு

நிலாவொரு மாயை

# "நிலவும் நீயும் நானும்" பற்றி

நிலவும் நீயும் நானும் முதல் இரண்டு பாகங்களை நீங்கள் அனைவரும் இரசித்திருப்பீர்கள். அதன் தொடர்ச்சியான இந்த **"நிலவும் நீயும் நானும்"** மூன்றாம் பாகத்திலும் நான் முதல் பாகத்தில் உங்களுடன் பகிர்ந்து கொண்டிருந்த எச்சரிக்கையான **"இந்த தொகுப்பை வாசிக்கும் போது, நிலவு நிலவாக இருக்கட்டும், நீங்கள் நீயாகவோ, நானாகவோ இருங்கள்"** என்பதனை உங்கள் முன் வைக்கிறேன். அதன் அர்த்தம் தானே தன் பொருளை விளக்கி கொள்ளும் களமாக அமைய துவங்கி இருக்கிறது இந்தக் களம். வாருங்கள் (சு)வாசிப்போம் இரசித்தபடியே, களமாடியபடியே !

உண்மையில் சொல்லப் போனால் இதைக் கவிதைத் தொகுப்பு என்று முடித்து விட எனக்கே மனமில்லை. ஆகையால் தொடர்ந்து நிலவுடன் நீங்களும் நானும் பயணித்துக் கொண்டே இருப்போமென நம்புகிறேன். நான் முன்பு உறுதியளித்தபடி 2018ல் மூன்று தொகுப்புகளையும் கொண்டு வந்து சேர்த்த மகிழ்ச்சி, என்னை 2019ல் நான்காம்.பாகத்திற்கான நாள் குறிக்கத் தூண்டுகிறது.

இதுவரை இபுத்தகங்களாக வெளியிடப்பட்ட நாலு சொல்லில் முதல் மற்றும் இரண்டாம் பாகம், நிலவும் நீயும் நானும் முதல் இரண்டு பாகங்கள், கண்களை மூடிப்பார் என்ற ஐந்து கவிதை தொகுப்புகளுக்கும், உண்மைச் சம்பவங்களின் அடிப்படையில் எழுதப்பட்ட என் மரணம், தீட்டு, குற்றால வலி(ழி) மற்றும் மக்களாட்சியில் என் கடைசிப் பயணம் என்ற குறுங்கதைகளுக்கும் பேராதரவு தந்த அனைத்து நல்லுள்ளங்களும் என் மனமார்ந்த நன்றிகளும் வணக்கங்களும்.

பெற்றெடுத்த நாள் முதல் இன்று வரை என் வாழ்வில் பல்வேறு விசயங்களுக்கான நல்விதைகளை சொற்களாலும் செயல்களாலும் விதைத்து கொண்டே இருக்கும் **என் தாய் திருமதி.சரோஜா அவர்களுக்கும், தந்தை திரு.ராசையா** அவர்களுக்கும் எனது சிரம் தாழ்ந்த வணக்கங்கள் எப்போதும் உரித்தாகுக. எனக்காக, என்னை என்னிடம் முழுவதும் தந்து விட்டு பயணிக்கும் என் சகோதரிகளுக்கும் என் நன்றிகள் உரித்தாகட்டும்.

அன்புடன்
கருவெளி ராச.மகேந்திரன்
ஆசிரியர்

# எச்சரிக்கை

நிலவு

நிலவாய் இருக்கட்டும்

நீங்கள்

நீயாகவோ.. நானாகவோ

இருந்து கொள்ளுங்கள்..

இனி வரும் ஒவ்வொரு கவிதையிலும்!!

நீங்கள் இப்புத்தகம் முழுவதும் மட்டுமின்றி இனி வரவிருக்கும் "நிலவும் நீயும் நானும்" தொகுப்புகள் முழுவதும் நிலவாக இருக்க ஒவ்வொரு முறையும் தூண்டப்படுவீர்கள். ஆனால் இடைவிடாது நீங்கள், நீயாகவோ, நானாகவோ இருக்க மட்டுமே முயற்சி செய்யுங்கள். இந்த எச்சரிக்கைக்கான அர்த்தம் உங்களுக்கு ஒரு நாள் விளங்கிவிடும். அந்த விளக்கம் தன்னைத் தானே விளக்கத் துவங்கும் களத்திற்குள் களமாட தயாராகுங்கள் !

# என் வீடு எதல்ல

என் வீடு..
சுவர்களில்லா..
இந்த வானக்கூரையின்
கீழிருக்கும்!

ஒற்றை நிலவும்
ஓராயிரம் கோடி மீனும்
வானத்தில் மிதந்திருக்கும்!

அங்கே நீ வந்து போக
உனக்கெப்படி
என் தடையிருக்கும்?

# அவளென்ன ஆவாளோ?

மாடிப் படி ஏறி முடிக்கும் முன்னே
என்னை வரவேற்பாள்
ஒவ்வொரு நாளும்..

பூமியின் ஒற்றை நிலவை
ஒரு நாளும் நான் தனியே
இரசிக்க முடிந்ததில்லை!
என் வீட்டு மொட்டை மாடியிலிருந்தும்!

அத்தனையும் நான் செய்த தவறு..
அவள் அன்னையின் சொல்லுக்காக
அவளுக்கு நிலாக் கதைகள் சொல்லி
அனுதினமும் நிலாச் சோறு ஊட்டியது
அத்தனையும் நான் செய்த தவறு!

அது நிகழ்ந்து..
ஆண்டுகள் பல ஓடி விட்டன!
ஆனாலும்..
அவள் அப்படியே தான் இருக்கிறாள்!
கடிந்து கொண்டே..
நிலாச் சோற்றை கையுருண்டைகளாக
வாங்கிக் கொள்ள ஒப்புக் கொண்டிருக்கிறாள்!

நான் இந்த வீடு விட்டுப் போனால்..
அவள் என்ன ஆவாளோ?
அந்த நினைப்பே
அந்த நிலவைப் போல்
ஓய்விழக்கச் செய்யுது என்னை!

# நானும் அவனும் நிலவும்

பல முறை கேட்டும்
ஒரு முறையும்
என் முகம் வரையாதவன்..
ஓராயிரம் முறை
ஒற்றை நிலவை..
வகை வகையாய் வரைந்து
தன் அறையெங்கும் நிறைக்கிறான்!

அவனாய் சொல்லும் வரை
ஒரு நாளும்
நான் காணவில்லை..
ஒவ்வொரு நிலவிலும்..
என் ஒவ்வொரு நாளின்
முக பாவனைகள் ஒழிந்திருப்பதை!

அவன் கலைஞன்..
நான் அவன் இரசிகை..
இரசிக்கத் தெரியா இரசிகை!
அவனை மட்டுமே
அனுதினமும் அணுவணுவாய்
இரசிக்கத் தெரிந்த இரசிகை!

# நஞ்சாய்

நீயிருப்பாய் என்ற கணத்தில்
எனக்குள்ளே இனித்த
நீ சொன்ன அத்தனை
நிலவுக் கவிதைகளும்..
நீயில்லை என்ற இக்கணத்தில்
எனக்குள்ளே நஞ்சாய்
நாடி நரம்புகளில் பரவுதடா!

# என் இரவெல்லாம்

இரவே இல்லா..
பனி ஆளும் இத்தேசத்தில்..
கண் அயரும்
அத்தனை வேளைகளையும்
இரவென நினைத்துக் கொள்கிறேன்!
இரவென்றால்..
நிலவில்லாமல் எப்படி?
உன் நினைவில்லாமல் எப்படி?

# சொந்தக் குரலில்

நிலவுக் கவிதைகள் சொல்ல
நீ இருந்தாய் எனக்கு!
நிலவுக் கவிதைகள் கேட்க
நான் மட்டுமே இருந்தேன் உனக்கு!

அது ஒரு காலம்!

இன்னும் நிலவுக் கவிதைகள் சொல்கிறாய்!
நானும் கேட்கிறேன்..
என் சொந்தக் குரலில் வாசித்து!
உன் குரலோடு உன்னையும் இழந்து!
உரிமையும் இழந்து!

# எப்படி?

நானின்றி நிலவிருப்பதைப் போல்
நானின்றி நீ வாழலாம்!
நீயின்றி நானெப்படி வாழ்வேன்?
என் ஒற்றை உறவும்..
என் ஒரே உயிரும் நீயடா (டி)!

# நீயும் நிலவும் நிறமும் 1

கோபத்தால்..
சிகப்பு முகம் காட்டி நடிக்கிறாள்..
அவளகத்தின்
நிறம் அமைதியின்
வெள்ளை நிறமே!

(ஒரு நாள் சிகப்பு நிலாவைக் கண்டேன்)

உன் கோபமுகம் காட்டாதே
நிலவும் சிவக்குது!
உன் அன்பு முகம் காட்டு..
நிலவும் மிளிரும் வைரமாய்!
மலரும் மல்லியாய்!

# நீயும் நிலவும் நிறமும் 2

உன்னைப் போலவே
நித்தம் நிறம் மாறுதோ?
உன் அன்பில் மாறாத
என்னிடத்திலும் இந்த நிலவு!

உன் ஊரில் நிலவு
சிகப்பு என்கிறாய்..
என் ஊரில் நிலவு
வெண்மை என்றால்..
நீ ஏன் ஏற்க மறுக்கிறாய்?!

# நிலா.. நிலா. நிலா..

ஓடோடி வந்தேன்!
உன் வாகனச் சத்தம் கேட்டு!
ஓடி வந்தவளுக்கு ஏமாற்றம்!
வந்ததோ உன் தந்தை..

முகம் பார்க்க மறுத்து
முன் நோக்கி நகர்கிறார்!
நேற்று வரை..
மருமகளே என்று அழைத்ததெல்லாம்..
வாய்வார்த்தைகள் ஆகிப் போனது!

உன்னைப் பேச விட்டிருக்கலாம்
நான் நேற்று!
இழந்து விட்ட பயத்தில்
இதயம் துறந்தது என் தவறு!

வாங்க மாமா.. என்றேன்..
கடமைக்கு தலையசைத்துக் கடக்கிறார்!
அதன் பின்னே..
அங்கிருக்க மனமில்லை..
மொட்டை மாடிக்கு நகர்கிறேன்..
நீயின்றி முதன் முறையாய்..

நிலவில்லாமல்..
நீயில்லாமல்..
வானம் பார்த்து நிற்கிறேன்!
நிலவில்லா அமாவாசை இரவில்
உன் கன்னத்தில்
நான் என் இதழால் வரைந்த
முதல் நிலவு..

என் இதழை மீண்டும்
தேடச் செய்யது..
உன் கன்னத்துக் குழிகளை!

மீண்டு விடும் முயற்சிகள்
ஏதுமில்லை..
உன் நினைவுகளில் நிறைந்தபடி..
மீண்டும் மீண்டும் முயற்சிக்கிறேன்
நீ என்னில் நுழைந்த
நிமிடங்களை கண்டறிய!

கண்டு பிடித்து பயனென்ன?
அந்தக் கேள்விக்கும் பதிலில்லை!

நிலவில்லா இரவுகளில்
நிலவின் நினைவுகளில்
நீ சொன்ன கவிதைகள்
நினைவுக்கு வருது!

தடையின்றி வழியுது
கண்களில் கண்ணீர்!

ஓங்கி உன் பேர் சொல்லி
அழைக்க உள்ளம் துடிக்குது..
அடுத்த நொடியில்
அதிருது என் கரங்கள்..
உன் அழைப்பொலி..
கைபேசியில்..

உடனே ஏற்கிறேன்..
"கீழே வா"
கட்டளையாக..

வேறு யாருக்கும் இல்லா
உரிமையும்
வேறு யாரிடமும் இல்லா
அன்பும்
அந்தக் குரலில் மட்டும்!

அடுத்த நொடி..
ஓடோடி வந்து நிற்கிறேன்!
கொஞ்சமும் அச்சமின்றி
கொஞ்சமும் வெட்கமின்றி
உன் கரம் பற்றி
உன் அருகே!

வீடே சிரிக்குது..
புரியாமல் விழிக்கிறேன்!

நிலாவும் சிரிக்கலாமே..
உன் குரல்..
மருந்திடுகிறது..
அழுது கொண்டிருந்த
என் இதயத்திற்கு..

ஓங்கி..
உன் பேர் சொல்லி..
உன்னைக் கட்டிக் கொண்டு
அழுகிறேன்!
அமைதியாய் துடிக்கும்
உன் இதயம்..
என்னை ஆறுதல் படுத்துது!

அவர்களின் சிரிப்பு
இன்னும் அடங்கவில்லை!
என் அழுகையும் தான்!
நிலா.. நிலா. நிலா.. என
துடிக்கும் உன் இதயத்துடிப்பும் தான்!

# நீயும் நிலவும் நானும்

ஓர் நிலவு
என ஓர் உறவு
என்றிருந்தவளிடம்..
ஏன் வந்து சேர்ந்தாய்..?
இன்னொரு உறவாய்!

நிலவைப் போலவே
நீயும் வளர்ந்தும் தேய்ந்தும்
உன் உறவால்..
என்னை பூரிப்படைய செய்கிறாய்!
என்னை வதைக்கிறாய்!
ஒவ்வொரு நாளும்..

# நிலவுப் பரிசு

உன் கன்னத்துக் குழிகள்
என் உதடுகளால் நிறைந்திருக்க..
நீ உறைந்திருக்கிறாய்..
நானும் எதிர்பாராமல் நிகழ்ந்தது தான்!

நிலவில்லா..
அமாவாசை இரவில்..
நிலவின் இல்லாமையை வர்ணித்த
உன் உதடுகளுக்குத் தான்
இந்த முத்தம் ஆகியிருக்க வேண்டும்
சொந்தம்..
இருந்தும் இடம் மாறி..
உன் கன்னத்துக் குழிகளுக்கு
பரிசாக்கி விட்டேன்!

நிறுத்தியிருந்த கவிதையை தொடர்கிறாய்..
நின்றிருக்க முடியாமல்..
உன் தாயை நோக்கி ஓடுகிறேன்..
அவரிடமும் நில்லாமல்
"அத்தை நாளைக்கு வாரேன்!"
மூன்று வார்த்தைகளில் நகர்கிறேன்!

அவருக்கும் தெரிந்திருக்குமோ?
நீ சொல்லி விடுவாயோ?
நாளை என்னைச் சந்திப்பாயோ?
கேள்விகள் நிறைந்து நுழைகிறேன்
என் இல்லம்!

# உனக்காகவே!

இல்லாத மொட்டை மாடிக்கு
என் வீட்டில் இல்லாத
மொட்டை மாடிக்கு
நான் வருவதெல்லாம்..
உன் வீட்டு மொட்டை மாடியில்
நிலா இரசிக்க வரும்
உனக்காகவே!

# யாருண்டு இங்கே?

மொட்டைக் கிணற்றில்..
படிகளில்லா..
மொட்டைக் கிணற்றில்..
வீழ்ந்த நிலாவைக் காப்பாற்ற
யாருண்டு இங்கே?

# காணாப் போனமாகிறோம்

ஓடி மறைகிறது
மேகங்களுக்குப் பின்னே..
சாட்சியாக மறுத்து
வானத்து நிலவு!

அரைகுறை
உயிரோடு..
அவன் உடல்
கல்லோடு கல்லாய் கட்டப்பட்டு
அவனுக்கு வாழ்வளித்த
அந்தக் கடலில் வீசப்படுகிறது!

அடுத்தது நான் தான்
அதற்காக காத்திருக்கிறேன்!
பாவிகள் வாழ்விலும் பிரிக்கிறார்கள்!
சாவிலாவது இணைத்துக் கட்டி
கடலில் வீசியிருக்கலாம்!

இன்னும் தூரமாய் கொண்டு போ..
பிணங்களும் சேரக்கூடாதென்று
ஆணையிடுகிறார்..
என் தந்தை!

அவன் செய்த பாவமெல்லாம்
என் சாதியில்..
என் மதத்தில்..
பிறக்காமல் போனதே!
எனக்காக உயிர் துறக்க துணிந்ததே!

நாங்களும் முந்தைய
காணாமல் போன கணக்குகளில்
இணைந்து கொள்கிறோம்!
ஊருக்குள் பல கதையாய் உலா வருவோம்!

# அவனும் நிலவும் அவளும் நானும்

நீண்ட தூரப் பயணம்
என் கனவு என்றாள்!
துவங்கியதும்..
முடிவில்லா பயணம்
என் கனவு என்றாள்!

நிகழ்வுகளில்..
ஏன் கனவு என்கிறாய்?
கேள்விக்குப் பதில்லை!

வாகனம் புறப்படத் தயாராய்..
வானம் கருக்கட்டும் என்கிறாள்!
அவள் எனக்கும் புதிராகிறாள்..
நிலவு வந்ததும் புறப்பட்டோம்!

அனைவரும் கையசைத்து
வழியனுப்ப துவங்கினோம்!
அவள் கரங்கள்..
என் தொப்புள் கொடியின்
வெப்பம் காக்க..
வண்டியின் வேகம் கூடுது!

ஆறு மணி நேரப் பயணம்
மௌனத்தை மட்டும்
சுமந்தபடி வருகிறாள்!
கேட்கவும் மனமில்லை..
கேட்காமல் இருக்கவும் மனமில்லை!
பாதைகளில் கவனம் வைத்து
முன்னோக்கி நகர்கிறேன்!

ஊரின் எல்லை..
வட்டத்தின் எல்லை..
மாவட்டத்தின் எல்லை..
மாநிலத்தின் எல்லை.. என
எல்லைகள் கடந்தாயிற்று!

இன்னும் அவள் மௌனத்தை
கடக்காமலே இருக்கிறாள்!
அவள் பிடியின் இறுக்கம்
மெதுவாய் குறைகிறது!
அப்போதே அவள் உடல்
என் மேல் சரிகிறது!

வேகத்தைக் குறைத்து..
வாகனத்தை நிறுத்துகிறேன்!
மெதுவாய் ஒரு கரத்தில்
அவளைத் தாங்கி..
மறுபுறத்தில் சாயாமல்
அவளை தரையிறக்க
முயற்சிக்கிறேன்!

திடீரென்று.. கண் விழித்து
தூக்கம் வந்திடுச்சுனு நினைக்கிறேன்
என்றவள்.. புறப்படலாமா? என்கிறாள்!
நடுநிசியாயிடுச்சு..
கொஞ்சம் ஓய்வெடுத்துட்டு போகலாமா?
தலையசைக்கிறாள்!

அவளுக்காகத்தான்..
இந்தப் பயணம்..
அவளுக்குத் தெரியாது தான்..
அவளைத் தேடித்தான்
இந்தப் பயணம்..
அவளுக்குத் தெரியாது தான்..

கண் விழித்து
வானம் பார்த்திருக்கிறாள்..
அவள் கண்ணில் பட
சூரிய மின்விளக்கேற்றி..
அந்தப் புத்தகம் திறக்கிறேன்!

அவள் காதில் பட வாசிக்கிறேன்..
"நிலவும் நீயும் நானும்"
அவள் காதில் பட சொல்கிறேன்..
தலைப்பே வித்தியாசமா இருக்கே?
அட.. ஆசிரியர் பெயர்..
"கருவெளி" ராச.மகேந்திரன்.
அனிச்சையாய்
புத்தகத்தை அபகரிக்கிறாள்..
என் கையிலிருந்து..

அதன் பின்னே..
எனக்கென்ன வேலையங்கு?
அவளாச்சு.. அவனாச்சு..
அவர்களின் நிலவாச்சு..
தற்காலிக தங்கிடத்தை விட்டு
வெளியேறி..
வண்டியை சரி பார்க்க துவங்குகிறேன்!

ஓங்கிக் குரலெழுப்பி அழுகிறாள்..
அவன் போன பின்னே..
அவள் வாய் விட்டு அழுவது..
இதுவே முதல் முறை!
அதுவும் அவன் எழுத்துக்களால்..
மட்டுமே சாத்தியமாகுது!

அவளை எனக்குத் தெரியும்..
அவனை எனக்குத் தெரியாது..
என்னையும் அவனுக்குத் தெரியாது..

அவள் வார்த்தைகள் எல்லாம்..
அவனே நிறைந்திருப்பான் என்பது..
அவள் அரைத் தோழி என்பதால்
எனக்கு மட்டும் தெரியும்!

ஒரு பெண்ணாய்..
அவள் மனம் எனக்குத் தெரியும்!
அவள் என்னிடம் சொல்லவில்லை தான்
இருந்தும் அவன் இவளின் வாழ்க்கை என
எனக்கு நன்றாய்த் தெரியும்!

அப்போது சொன்ன போது..
நிராகரித்தவள்..
இப்போதும் இடைவிடாது
மறுப்பவள்..
அவனைப் போலவே
புதிராய் நிற்கிறாள்! எனக்கு.

அவளே..
வெளியே ஓடி வருகிறாள்..
ஒவ்வொரு கவிதையாய்..
வாசித்து..
அவனுக்கான வரிகளென
குதூகலமடைகிறாள்!

நடுநிசியில்..
மலைப்பாதையில் முகட்டில் ஏறி
நிலவை நோக்கி
அவன் பேர் சொல்லி
ஓங்கி கத்துகிறாள்!

அவள் குரல்
அவனைச் சென்றடையுமோ?
அந்த நிலவு கொண்டு சேர்க்குமோ?
என் கணிப்பு சரி என்றால்..
நாங்கள் காண்போமோ அவனை?
எங்கள் பயணம்.. புத்தகம்
அச்சிட்ட முகவரி நோக்கி தான்!
அவளுக்குத் தெரியாது தான்!

ஓடி வந்தவள்..
வீட்டுக்குப் போகலாம்.. வா என்கிறாள்!
மூன்று நாள் பயணம் இருக்கே
முடித்து விட்டு போகலாம் என்றாலும்
விரைவாய் வீட்டுக் போகலாம் என்கிறாள்!

அவள் எதையோ..
கண்டுபிடித்து விட்ட..
அடைந்து விட்ட திருப்தியில் இருக்கிறாள்!
என் சொற்கள் யாவும் செல்லாமல் போகுது!
திட்டத்தை சொன்னால்..
ஒப்புக் கொள்வாளோ?

மெதுவாய் சொல்கிறேன்!
மௌனமாய் கேட்டவள்..
ஓங்கிச் சிரிக்கிறாள்..
மலையெல்லாம் அவளோடு
சேர்ந்து சிரிக்குது!

அடிப்போடி..
அம்பதாவது பக்கம் பார்..
சொல்லி விட்டு மீண்டும்
மலைகளோடு சேர்ந்து சிரிக்கிறாள்!
பார்த்து வியக்கிறேன்..
எங்கள் பயணம்..
கவிதையாய்..

அவள் அப்படி ஆனதில்..
எனக்கிருந்த அத்தனை ஐயமும்
தூளாகிப் போனது!

அடுத்தபக்கம் திருப்புகிறேன்..
எங்கள் பயணம்..
பாதியில் வீடு திரும்புகிறது!
அவள் எனக்கு முன்
வாகனத்தோடு வந்து நிற்கிறாள்!

தேதி கேட்டவள்..
நேரம் கேட்டவள்..
தலைகவசம் எடுத்து மாட்டுகிறாள்!
வந்த வழியில் புறப்படுகிறாள்!
அது கொஞ்சம் அதிக வேகம் தான்!
இந்த தேசத்தை குறுக்கு நெடுக்காய்
மிகக் குறைந்த நேரத்தில் கடந்த
எனக்கே அது அதிக வேகம் தான்!

நிலவைப் பார்த்து சிரித்தபடி..
வேகத்தை அதிகரிக்கிறாள்!
அவளுக்குள் அவனும் இருக்கிறான்!
அவளை இறுக கட்டிக் கொள்கிறேன்!
"அச்சம் தவிர்" என்றவாறு
வேகத்தை குறைக்காமல் பறக்கிறாள்!

அவள் நம்பிக்கை..
அவனிடம் கொண்டு சேர்க்கும்..
அந்த நிமிடத்திற்காக
அனைவருடன் நானும் காத்திருக்கிறேன்!

அவள் சொன்ன அவனும்
அவள் சொல்லாத அவனும்
அக்கவிதைகளில் நான் கண்ட அவனும்
அவள் கண்டு கொண்ட அவனுமாய்
அத்தனை நிமிடங்களிலும்
அவள் நினைவுகளில் நானும்
அவளோடு பயணிக்கிறேன்!

எதிரே வரும் அத்தனை வாகனங்களையும்
உடன் வரும் வாகனமாய் முந்திச் செல்கிறாள்!
அவளே அவனுக்கான அவள்!
ஏன் போகிறாளோ? அவனங்கு இருப்பானோ?
ஆயிரம் கேள்விகள் சுமந்து நானும் பயணிக்கிறேன்!

# கண்முன்னே சாம்பலாகிறேன்!

அத்தனையும் எரிந்து கொண்டிந்தன..
அவன் மட்டும் இரசித்துக் கொண்டிருந்தான்..
அவன் இரசித்து இரசித்து எழுதிய
அத்தனை நிலவுக் கவிதைகளும்
அந்தத் தீச்சுவாலையுடன் ஒளி வீசின..
அதனுடன் எரிவது..
அவனுடனான என் உறவும் தான்!

அவன் வீடு செல்ல இயலாமல்
அருகிலிருந்தும் என் வீட்டு மாடியில்
அவனை கெஞ்சியபடி நிற்கிறேன்!
நான் சிந்தும் கண்ணீர்
அவனையும் நிறுத்தவில்லை..
அங்கு எரிந்து சாம்பலாகும்
எங்கள் உறவையும் தான்!

வானத்து நிலவோ..
காட்சியைக் காண வருந்தி..
மேகங்களுக்கு பின்னே ஒளிந்திருக்கு!
அந்த வாய்ப்பும் இல்லாமல்
நான் அழுதிருக்கேன்!

அவன் மீண்டும் அவனாகி விட்டான்!
அவனில் இருந்த நான்
வேறாகி விட்டேன்!
எங்கள் வாழ்வு..
என் வாழ்வாகி விட்டது!
நிலா நான் சாம்பலாகிறேன்..
கவிதைகளோடு!

# என் கனவு என் நினைவு

இது என் கனவு..
ஆனாலும் அவனையும்
காணச் சொல்லியிருந்தேன்!
கனவுகளாய் விட்டு வைப்பதில்
அவனுக்கு ஏதும் விருப்பமில்லை!
அப்படி ஏதும் திட்டமுமில்லை!

எனக்கு பிடித்த
பௌர்ணமி இரவென்று
அவனே நாள் குறித்து விட்டான்!

ஓர் இரவு..
இரு சக்கர வாகனம்..
அவன் என் பின்னே..
வேறென்ன வேண்டும்?
கடக்க வேண்டியதோ..
ஐந்து நூறு ஆயிரம் மீட்டர்களே!

சரியென்று..
தலையசைத்து விட்டேன்!
யாரவன்?
எனக்கென ஏன் எடுக்கிறான்?
இத்தனை முயற்சிகள்..
உங்களுக்கான கேள்வி மட்டுமல்ல..
எனக்குமான கேள்வியும் தான்!

பயண நாள் நெருங்க நெருங்க..
அச்சம் பற்றிக் கொண்டது
புதுப் பயணமட்டுமல்ல..
புதுப் பயணியுடன் இப்பயணம்!

நான் எதிர்பார்த்திருந்தது
என்னவனை!
அவனோடு நானும் குறித்திருந்ததும்
அதே பௌர்ணமி நாள் தான்..
அவனில்லை.. ஆனாலும் தொடர்கிறேன்!
அவன் பெயர் சொல்லித் தான்
இவனும் அறிமுகமானான்!

இவன் இருசக்கர வாகனங்களில்
வல்லுவத்துவம் மிக்கவன்..
அது போதும் இப்பயணத்திற்கு!

புறப்படும் இடத்திற்கு
நான் வந்து சேர்ந்து விட்டேன்..
நிலவும் வந்து சேர்ந்து விட்டது!
அவன் வரும் திசை நோக்கி
நான் காத்திருக்கிறேன்!

அவன் கைபேசிக்கு
அழைப்பு செல்கிறது..
அழைப்பேற்று பேச யாருமில்லை!
அழைப்பு நிறுத்துகிறேன்..
அவன் எண்ணிலிருந்து
அழைப்பு வருது!

ஏற்ற அழைப்பின்
எதிர் முனையில்..
ஏதோ ஒருவரின் குரல்..
அவன் விபத்தில் சிக்கி..
சிகிச்சைக்கு எடுத்துச் செல்லப்படுவதை
எனக்குச் சொல்லுது!

மீண்டும் அழைப்பு
அவன் எண்ணில் இருந்து..

அவன் சார்பாக..
இன்னொருவர் வருவதாய்..
வேண்டாமென்று மறுக்கிறேன்!

வானம் பார்க்கிறேன்..
வெண்ணிலா காத்திருக்கு..
என்னோடு பயணிக்க..
என் இரு சக்கர வாகனத்தில்
அவன் புகைப்படம் மட்டும்
ஒரு முறை சிரித்துக் கொள்கிறேன்!

என் கைபேசி சொல்லுது
அவன் பெயர் சொல்லி..
குறுஞ்செய்தி வந்திருப்பதாய்!
ஓரிரு வரிகளிலும்
ஒற்றைச் செய்திகளிலும்
என் வாழ்வை நகர்த்துவது
அவனுக்கே சாத்தியம்!

நம்பிக்கையோடு..
நான் புறப்படத் தயாராகிறேன்!
இவன் ஏன் இடையில் வந்தான்?
ஏன் விபத்தில் சிக்கி
இடையில் பிரிந்தான்?
விடைகள் ஏதுமில்லை..

காலக் கடிகாரத்தை முடிக்கி விட்டு
இரும்புக் குதிரையை கிளப்பினேன்!
அவன் என்னோடு என் பின்னே
என் இரும்புக்குதிரையில் இல்லை!
இடையில் வந்த இவனும்
என் பின்னே வரவும் இல்லை!

நான் மட்டும்..
நான் மட்டுமே துவங்குகிறேன்!

ஒருத்தியாய் முடிவில்லா சாலையில்
நானும் என் இரும்புக் குதிரையும்
விரைகிறோம்!

யாரோ தொடர்வதாய்..
யாரோ கண்காணிப்பதாய்..
உள்ளுக்குள் ஓர் எண்ணம்..
அதை திரும்பக் குவித்து..
சாலையில் வைக்கிறேன்
என் கவனத்தை!

ஒவ்வொரு நூறு ஆயிரம் மீட்டர்களில்
ஓரிரு நொடிகள் ஓய்வோடு
மீண்டும் தொடர்கிறேன்!
ஒவ்வொரு ஓய்விலும்
ஒவ்வொரு பார்வையிலும்
சாலையையும் பௌர்ணமி நிலவையும்
கவனத்தில் நிறுத்துகிறேன்!

அவன் இருந்திருந்தால்..
குறைந்தது இவளாவது இருந்திருந்தால்..
எந்தக் கவலையும் எனக்கிருந்திருக்காது!
எதற்கும் சாத்தியமில்லாமல்
ஏன் இந்தப் பயணமோ?

இருப்பதோ..
இன்னும் இருபது ஆயிரம் மீட்டர்களே..
இதைக் கொண்டாட அவனிருந்திருந்தால்
இந்த நொடிகள் எப்படி இருந்திருக்கும்?

அந்த நொடியே..
என் கண்களின் காட்சியை மறைக்குது..
என் கண்களுக்குச் சொந்தமான நீர்..
விபத்தைத் தவிர்க்க வேகம் குறைக்கிறேன்!
எதிர்பாரா திட்டமிடப்படா ஓய்வுக்கு
தள்ளப்படுகிறேன்!

மீண்டும் என் கைபேசி..
அவன் பெயர் சொல்லி ஒலிக்குது
குறுந்தகவல் வந்திருப்பதை சொல்லுது!
என் பயணத்தை அவன்..
இடைவிடாது கண்காணிக்கிறான்!
எங்கிருந்து என்பதே கேள்வி..
விடையில்லாக் கேள்வி..

உடனே புறப்படுகிறேன்!
என்னை அவனறிவான்..
அவனை நானறிவேன்!
அதோ.. என் இலக்கு..
கண்ணெதிரே காத்திருக்கு!

நான் நெருங்க நெருங்க..
நிலவும் நிம்மதியாய்
தன் பணி முடித்து..
ஓய்வுக்குச் செல்லுது..
கதிரவன் பணியேற்க
கிழக்கிலிருந்து வருகிறான்!

இரு நூறு மீட்டர்களே..
இடைவெளி
எனக்கும் என் இலக்கிற்கும்..
திடீரென இலக்கின் வண்ணம் மாறுது..
ஒளியால் என் பெயர்
வெளியில் நிறைகிறது!
எதிர்பாராக் கூட்டம் கூடுகிறது..

அட! அக்கூட்டத்தில்
என் பெற்றோரும்!
அவன் மட்டுமில்லை!
அனைவரும் வாழ்த்தி வரவேற்கிறார்கள்!

மீண்டும் அவன் பேர் சொல்லுது
என் கைபேசி..
வாழ்த்துச் செய்தி..

அந்த எண்ணை அழைக்க முயல்கிறேன்!
அழைப்பு ஏற்கப் படாமலே!

என் அத்தனை கனவுகளும்
நிகழ்வாகி விட்டன!
அதுவும் என்னாலே..

திரும்பிப் பார்க்கிறேன்
என் பெற்றோரை..
பெருமையாய் பலரிடமும்
சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!

அனைவரும் இருந்தும்
அவனின்றி நான் மட்டும்
அக்கூட்டத்தில் தன்னந்தனியே!
ஆகாயத்தில் பூமிக்கான ஒற்றை நிலவென!

ஓடிப் போகிறேன்
என் பெற்றோரைக் கட்டிக் கொண்டு
கண்ணீர் விடுகிறேன்!
அவர்கள் அறிவார்கள்..
அவன் என் வாழ்வென்று!

மங்கலாகிய கண்ணில்..
மங்கலாகிறது மதியும்..
கதிரவன் ஒளி பரப்ப துவங்குது!
சாதனைக்காக வாழ்த்துச் செய்திகள்
வந்து குவியுது!

முதல் பெண்மணிக்கான
சாதனைப் பதக்கத்தை
தோளில் தாங்கி புறப்படுகிறேன்!
அவனில்லா பாதையில்..
நிலவுமின்றி நான் மட்டும்!

# நம்பிக்கையிலேயே

எறிந்து விட்ட..
நீ எறிந்து விட்ட..
எனக்கே எனக்கான
அத்தனை நிலவுக் கவிதைகளும்
சாம்பலாகி பறக்குது
காற்றில்!

அதையே சுவாசிக்கிறேன்!
அதையே வாசிக்கிறேன்!
அந்த வானத்து ஒற்றை நிலவும்
உன் ஒற்றை நிலாவும்
உயிர்ப்பித்து இருப்பது
இன்னொரு நிலவுக்கவிதை
நீ படைப்பாய் என்ற நம்பிக்கையிலேயே!

# முயலாதே!

எழுத்துக்களும்
வார்த்தைக் கோர்வைகளும்
உனக்குச் சொந்தமாய் இருக்கலாம்!
கருப்பொருளாய் இருப்பது
அந்த வானத்து ஒற்றை நிலவும்
உன் அன்ப ஒற்றை நிலாவும் தான்!
நீயாய் அழித்திட
எங்கள் இருவரையும் அழித்திட
ஒரு போதும் முயலாதே!

# வானம் நகைக்குது!

ஊர்க் கிணற்றை
ஊர் சுற்றி நின்றிருக்கு..
உன் வீடோ..
ஓலமிட்டபடி இருக்கு!
நீ சொன்ன வார்த்தைகளை..
நான் நினைத்து ஓடி வருகிறேன்!

ஊர்க்கிணற்றில்..
ஒற்றை நிலவோடு..
என் நிலா நீயும் மிதக்கிறாய்
கடைசி மூச்சு விட்டு
எத்தனை நாளாச்சோ?

மீட்டெடுக்க உரிமை மறுக்கப்பட்டு
வானம் பார்த்து நிற்கிறேன்
நிலவைக் கைப்பற்றிய வானம்
பூமி பார்த்து..
என்னைப் பார்த்து நகைக்குது!
என் ஒற்றை உறவு உனக்கும்
பூமியின் ஒற்றை உறவுக்கும்
ஒரே பெயர் தான்!

# நிலவுத் துளிகள் 1

இணைத்த நிலவு பிரித்தது
நம்மை!
பிரித்த நிலவு இணைக்குமோ?
நம்மை!

என் வீடு கடக்க மறுக்குமோ?
வானத்தின் ஒற்றை நிலவு!
நீ வந்து நிற்கிறாய்..
என் வீட்டின் உள்ளே..
உன் இல்லம் போக மறுத்து!

# தடை எதுக்கு எனக்கு?

மொட்டை மாடி வைத்ததே
இரவெல்லாம்
வானத்து விண்மீன்களுடன்
உறவாடவும்..
இடைவெளியின்றி இரவெல்லாம்
நிலவொளியில் குளித்திருக்கவே!
அங்கே செல்லவும்
விதித்து விட்டார்கள் தடை!
என் வீட்டில்..
அதுவும் ஆறு மணிக்கு மேல்..

சொல்ல மறந்து விட்டேன்..
அருகிலுள்ள மொட்டை மாடியில் தான்
அவனும் தன் இரவைக் கழித்திருப்பான்!
அவனை அவர்கள் தான்
அறிமுகம் செய்தார்கள்!
அந்த வானத்து நிலவை
அவன் தான் அறிமுகம் செய்தான்!
அது நிகழ்ந்தது மூவாறு ஆண்டுக்கு முன்னே!

# நி(ல்)லாத் தூது

உன் விருப்பங்களையும்
உன் பிரிவினையும்
உன் உறவினையும்
உன் வலியினையும்
உன் வாழ்வினையும்
நித்தம் வந்து சொல்லுதே
வானத்து ஒற்றை நிலவு
என் வீட்டு சன்னல் வழியே!

# இன்னொரு அமாவாசை நிலவு வரைந்தாள்

நிலவும் இல்லா
அமாவாசை இரவொன்றில்
கண்களில் நிலவொளி வீசி
வருகிறாள் என்னை நோக்கி!

மூச்சுத் திணறலை
சமாளிக்க சுவாசிக்கிறேன்
இன்னும் வேகமாய்!
கடந்து போன அமாவாசை இரவின்
நினைவுகள் வந்து நிறையுது!

நுரையீரலுக்கும்
இதயத்திற்கும் இடைவிடாது
பணிகள் கூடுது!

கைக்கு எட்டும் தூரத்தில்
அவளை நிறுத்துகிறேன்!
அவளைத் தீண்டும் தைரியம்
எனக்கில்லை!

என் தீண்டாக் கரத்தை தாண்டும்
எண்ணம் அவளுக்கு இல்லை!
அனுமதிக்காக அங்கேயே காத்திருக்கிறாள்!

அவள் அனுமதிக்கு காத்திருக்காமல்
மொட்டை மாடி விட்டு..
நான் மட்டும் புறப்படுகிறேன்!

அவள் கண்ணீர் துளிகள்
என் கரங்களை கரைக்கலாம்..
என் நெஞ்சத்தைக் கரைக்காது!

அம்மாவிடம் சொல்ல வேண்டும்
உள்ளம் துடித்தாலும்..
அவளுக்காக விட்டு விட்டேன்!

அடுத்தது என்ன?
உள்ளத்தில் தோன்றிய கேள்வியை..
கேட்டபடி உள்ளே வருகிறாள்!

பேச்சை மாற்ற..
அம்மாவை அழைக்கிறேன்!
அவளும் இணைந்து கொள்கிறாள்!

அவளை அவள் வீட்டுக்கனுப்ப
வழி தெரியாமல் விழித்திருக்கிறேன்!
நிலவில்லை என்பதால்..
என்னையும் உடன் அனுப்புகிறார் என் தாய்!

நன்றி சொல்கிறாள்.. அவள் அத்தைக்கு
அவள் திட்டம் புரிந்து விட்டது!
இருபது அடி தூரம் தான்.. இருந்தும்
அவள் இதழ் வரைந்த
இன்னொரு அமாவாசை நிலவோடு
திரும்பினேன் என் இல்லம்!

இதற்கு முந்தைய தொகுப்பை வாசித்திருந்தவர்களுக்கு அவள் வரைந்த முதல் அமாவாசை நிலவு பற்றித் தெரியும். இந்தத் தொகுப்பை முதன் முதலாக வாசிப்பவர்களுக்கு அந்த அனுபவம் கிடைக்க வாய்ப்பில்லை தான். இருந்தாலும் இதையே முதல் அமாவாசை நிலவாக நினைத்து தேற்றிக் கொள்ளுங்கள்.

# மதியும் மதியும் மதியும்

என் கைபேசியின் அழைப்பை
ஏற்றதும்..
அது தன் வாழ்வென்றாள்!
"நிலவும் நீயும் நானும்"
நூலில் வரும் பத்தாவது
கவிக்கதை தன் வாழ்வென்றாள்!

எத்தனையோ.. சொல்லியும்..
அவள் ஆகவில்லை சமாதானம்!
அத்தனையும் கற்பனை என்றேன்!
ஆனாலும் ஏற்கவில்லை!
எனக்கெப்படி தெரியுமென்றாள்?

உண்மையைச் சொல்லவா?
பொய்யைச் சொல்லவா?
புரியா ஓர் நிலையில்..
பொய்யைச் சொன்னேன்!
எனக்கு வந்த கனவென!

நேரில் சந்திக்க
அனுமதி கோரினாள்!
அலுவலக முகவரியைக் கொடுத்து
அழைப்பை முடித்தேன்!

உடனே அழைத்தேன்..
சட்ட ஆலோசகருக்கு!
அவர் கவிதையைக் கேட்டார்..
வாசிக்கத் துவங்கினேன்..

சிரித்துக் கொண்டே..
அவரும் சொன்னார்..
அது என் வாழ்க்கையும் தான்!

என்ன சொல்றீங்க?
இது என்ன கேள்வி!

கவலைய விடுங்க..
பெண் காவலாளியோட
உங்க அலுவலகத்தில்
நாளை காலையில இருப்பேன்!

அவர் சொல்லி முடிக்க..
காவல் துறை சீருடையை
தவிர்த்தால் நல்லதென்ற
வேண்டுகோளுடன்
அழைப்பைத் முடித்தேன்!

அவனும் அவளும் இல்லா
நிலவுக் கவிதைகளே எழுதனும்..
அதே முடிவோடு
கணிணி முன் அமர்கிறேன்!

மீண்டும் அதே எண்ணிலிருந்து
அழைப்பு..
அவளே பேசுகிறாள்..
அழுகுரலில்!

நான் இப்பவே வரட்டுமா?

அவள் கேட்டு முடிக்கையில்..
இரவு பத்துமணியை தாண்டியிருந்தது..
என் வீட்டுக் கடிகாரம்!

காலையில வாங்க சந்திக்கலாம்..
சமாதானமாய் பேசினேன்!
திடீரென..
குரல் மாறியது..

எதிர் முனையில்..
நீங்க யாரு? என்ற வினாவுடன்

சுய அறிமுகம் முடிந்ததும்..
மன்னிக்கனும்..
அவ.. எங்க பொண்ணு தான்..
கொஞ்சம் மன அழுத்த நோயால்
பாதிக்கப்பட்டிருக்கிறாள்! அவ..
தொந்தரவு செஞ்சிருந்தா..
மன்னிச்சுடுங்க!

இணைப்பு துண்டிக்கப் படுகிறது!

மீண்டும் புத்தகத்தை எடுக்கிறேன்!
"மதியும் மதியும் மதியும்"
கொடூர முறையில்
கொலை செய்யப்பட்ட
மதியின் கடைசி நிமிடங்களை!
நிலவின் சாட்சியாய்
அவன் மதி மயக்கிய
மதி சொல்வதாய்!
எழுதி இருக்கேன்!

வழக்கறிஞரை அழைக்கிறேன்!
"தானே அதை வழக்காய் பதிவு செய்ததால்"
தன் வாழ்க்கையும் தான் என்றேன்!
எதிர் முனையில் அவரது பதில்
ஆச்சர்யமாய் எனக்கு!

காதலி பற்றி கேட்டேன்..
அவள் ஓரிரு வாரங்களில்
இறந்து விட்டாளே!
அப்படித்தான் அந்த வழக்கு
நிறைவானது என்று
நினைவிலிருந்ததை கூறுகிறார்!

என் நினைவு
நிலை தடுமாறுது!

எனக்கு ஆறுதல் சொல்லி
அழைப்பைத் துண்டிக்கிறார்!

மதியும் மதியும் மதியும்..
என் மதிக்குள் சுழல்கிறது..

நடுநிசியைக் கடந்து கொண்டிருந்தது
கடிகார முள்!

மீண்டும் என் கைபேசி..
துடித்தபடி என் அருகே..
அது வேறு எண்..
அந்த நடுநிசி நேரத்தில்..
நான் ஏற்கும் முதல் அழைப்பு
அது தான்!

அதே குரல்..
அழுதபடி சொல்கிறாள்..
மதி.. தானே என்று!
இப்போதே வருகிறேன் என்கிறாள்!

பெரும் போராட்டத்திற்கு பின்
காலை நடைபயிற்சியில் சந்திக்க
சம்மதம் பெறுகிறேன்!
அவள் அவசரத்தை
அவள் வார்த்தைகள் சொல்கின்றன!

அழைப்பை முடித்து..
கண்ணயர முயல்கிறேன்!

மீண்டும் என் கைபேசி அழைக்குது!
அதே எண்..

அழைப்பை ஏற்கிறேன்..
அதே வேறு குரல்..
அதே மன்னிப்புடன்
அழைப்பு துண்டிக்கப் படுகிறது!

கவிக்கதைக்கான..
கரு எங்கிருந்து கிடைத்தது..
தேடத் துவங்குகிறேன்!

கடைசியில் கண்டு பிடித்தாயிற்று..
மண் ஆளும் தேசத்தில்
அறுபதுகளில் நிகழ்ந்ததாய்
அந்த ஊர் வயதானவர் சொன்ன
செவி வழிச் செய்தி!

ஐம்பதாண்டுகளுக்குப் பின்..
அதே நிகழ்வு..
அதுவும் முடிந்து போன
வழக்கிலிருந்து..

தூக்கம் தூரம் நின்று
என்னைப் பார்த்து
நகைத்தது!

கண் மூடி விழிக்கையில்..
முப்பது நிமிடமே இருந்தது
அவளை சந்திப்பதாய்
சொல்லியிருந்த நிமிடத்திற்கு..

பரபரப்பாய் கிளம்பி..
மிதிவண்டியை எடுத்தேன்..
சரியான நேரத்தில்..
காலை வாரியது..
காற்று இல்லாமல்..

பிறகென்ன..
போன வருடம் ஓடிப் பழகியது
இப்போது உதவியது..
ஓடிப் போய் நின்றேன்..
ஓரிரு நிமிடங்கள்
இன்னும் மீதமிருந்தது!

அத்தனை திசைகளிலும்
திரும்பித் திரும்பிப் பார்த்தேன்!
என்னைப் போல் யாரும்
அங்கே தேடிக் கொண்டிருக்கவில்லை!

கைபேசியை நோக்கினேன்
அந்த எண்ணுக்கு அழைக்க நினைத்தேன்!
ஆனாலும் தவிர்த்தேன்..
அந்த வேறு குரல் பற்றிய
அச்சத்தால்!

சில அடிகள் எடுத்து வைத்தேன்!
நடக்க துவங்கும் முன்னே
வியர்த்துப் போயிருந்தேன்!
பத்து அடிகளுக்குள்..
மீண்டும் என் கைபேசி துடித்தது!

இது வேறு எண்..
அவளின் குரல்..
வேண்டுகோளுக்கிணங்கி..
விரைகிறேன்..
அந்த மரத்தை நோக்கி..
மரத்தின் பின்னிருந்து
முகத்தை மூடியபடி வருகிறாள்!
அவள் விழிகள்..
எனக்கு பழக்கப்பட்டு இருந்தன!

என் பேர் சொல்லி அழைக்கிறாள்!
கைபேசியில் கேட்ட அதே குரல்
அவள் கையில்..
"நிலவும் நீயும் நானும்" புத்தகம்!

என் கைபிடித்து..
கூட்டத்தில் என்னையும் சேர்க்கிறாள்!
அந்தத் தீண்டல்
எனக்கு பழக்கப் பட்டிருந்தது!

காற்றில் அவள் முகத்திரை
விலக முடியாமல் துடிக்கிறது!
என் இதயமும் தான்..
கூட்டத்திலிருந்து பிரிக்காமல்
கூடவே நகர்கிறாள்..
அவளது பிடியின் இறுக்கம்
எனக்கு மிகவும் பழக்கமானதாய்!

எப்படி இது சாத்தியம்?
விரைந்து ஒரு தெருவில் நுழைகிறாள்!
அங்கு தண்ணீருக்காய்
சண்டையிடும் மக்கள் கூட்டம்!
அவளைத் தடுத்து நிறுத்த
மனமின்றி பயணிக்கிறேன்!

அவளை நிறுத்த நினைக்கையில்
அவளே நிற்கிறாள்..
அக்கம் பக்கம் பார்த்து விட்டு
எதிரே இருந்த வீட்டின்
கதவைத் திறக்கிறாள்!
உள்ளே நுழைந்து..
வீட்டுக்கு ஒளியூட்டுகிறாள்!

ஒளியூட்டிய கையோடு
தன் முகத்திரை நீக்குகிறாள்!

கதவு தட்டப்படுகிறது!

கண் விழித்துப் பார்க்கிறேன்!

வழக்கறிஞர் வாசலிலிருந்தபடி
அழைக்கிறார்!
அவசர அவசரமாய் எழுந்து
அவரை வரவேற்பறையில்
அமர்த்தி விட்டு..
தயாராகி திரும்புகிறேன்!

அவர் கையிலும்
"நிலவும் நீயும் நானும்" புத்தகம்..
பத்தாவது கவிக்கதைக்கான பக்கம்
புரட்டியவர்..
அவசரமாய் என்னிடம் காட்டுகிறார்
அவர் கையிலிருந்த
வழக்கிற்கான கோப்பிலுள்ள படங்களை..

அதிர்ந்து மட்டுமல்ல
உறைந்தும் போனேன்..

யார் வரைந்தது?
"மதியும் மதியும் மதியும்" கவிக்கதைக்கான
ஓவியத்தை..
அவர் முடிக்கும் முன்னே..
நானென்று சொல்லி முடிக்கிறேன்!

என் கற்பனையில் வரைந்ததென்றால்
நானும் நம்பமுடியாமல்
அந்த வழக்கின் புகைப்படங்களோடு
அப்படியே ஒத்து இருந்தது ஓவியம்!

உடனே வாங்க..
அந்தப் பொண்ணைப் பார்க்க போகலாம்..
பெண் காவலர் உங்க அலுவலகம்
போயிட்டாங்க!

சில மணி நேரங்கள்
முன்னால் சென்று திரும்புகிறேன்..
முகத்திரை நீக்கியவள்..
என் முதல் வாசகியென
எனக்கு அறிமுகமானவள்!

நீங்களா? - நான்
வாய் திறப்பதற்குள்..
மீண்டும் என் கைபற்றி
அழைத்து செல்கிறாள்
அடுத்த அறைக்குள்!

அவள் என் கைபிடித்து இழுப்பது
இது பத்தாவது முறை..
முதல் வாசகி என்று
அவளே சொல்லிக் கொள்வாள்!
என் முதல் வாசகியை..
எனக்கு மட்டுமே தெரியும்!
இருந்தாலும் இவளை
பொறுத்துக் கொண்டேன்!

அங்கே நான் காண்பது..
உண்மையா?
"மதியும் மதியும் மதியும்"
கவிக்கதைக்கான ஓவியங்கள்
அச்சுவற்றில் புகைப்படங்களாய்!

அந்த வாசகியிடம் கொடுத்த
வாக்குறுதியின் நினைவுகள் சுமந்து
என் வீட்டுக் கதவுகள் மூடி..
வழக்கறிஞரோடு புறப்பட்டேன்!
என் அலுவலகம் நோக்கி
வரப் போகாத மதியை சந்திக்க!

அலுவலகம் அடைந்து
காவலாளியோடு காத்திருந்தோம்
மதியின் வருகைக்காக!
அவள் அழைத்திருந்த
அத்தனை எண்களிலும்
அழைத்து முயற்சித்து தோற்று..
காவலதிகாரியும் வழக்கறிஞரும்
அறிவுரை கூறி புறப்பட..

புத்தகத்தைப் புரட்டினேன்..
என் கைபேசி மறுபடியும்
துடித்தது..
அதே குரல்..
அந்த முழுமதி இரவை
முழுவதும் விவரிக்குது!

அடுத்த பாகத்தில்
எழுதுவதாய்.. வாக்களித்து
கைபேசியை வைக்கிறேன்!

நிறைவடையா நினைவுகள்
சுழன்று சுழன்று
உலகைச் சுழற்ற..
இல்லம் நோக்கிப் புறப்படுகிறேன்!

நன்றியும்.. வாழ்த்தும்..
கைபேசியில் குறுந்தகவலாய்..
முதல் வாசகியிடமிருந்து..

ஆம்!
அவள் எப்படி
என் வாசகி ஆனாள்?
முதல் வாசகி ஆனாள்!
அத்தனை கேள்விகளோடும்
வீடு நோக்கி விரைகிறேன்!

நிலவும் அவளும் காத்திருப்பார்கள்
எனக்காக..
என் அழைப்புக்காக!

(முதல் வாசகி யாரென்றும், அந்த முழுமதி இரவில் நிகழ்ந்ததாய் முதல் வாசகி என்று சொல்லிக் கொண்டவள் யாரென்றும், இன்னொரு கவிதைகளுக்குள் சொல்லி இருக்கிறேன், அதனை கண்டு பிடிக்க வேண்டியது நீங்கள் தான். அந்தக் கவிதை எந்தத் தொகுப்பில் இருக்கிறது என்பதே நீங்கள் முதலில் கண்டு பிடிக்க வேண்டிய விசயம்)

# என் வீட்டு நிலா

கூரையில்லா வீட்டில்
மேற்கூரையில்லா வீட்டில்
நான் மட்டும் இருக்கையிலே
நான் இரசித்த அந்த குளிர் நிலவு
எனை நம்பி நீ வந்த பின்னே
நித்தமும் சுட்டெரிக்குதடி சூரியனாய்!

வீடும் இல்லாதவனை நம்பி..
வீட்டுக் கூரையும் இல்லாதவனை நம்பி..
நீ ஏன் வந்தாயோ?
வானத்து நிலவு போல..
என் இல்லத்தினுள்ளே!

# நிலவும் நிகழ்வும் உறவும்

நான் முதலில் வரைந்த
இன்னொரு உறவு..
வானத்து நிலவு தான்!
அதுவும் நான்
எழுதப் படிக்கும் முன்னே..

என் நினைவுகள்
சரி என்றால்..
எனக்கு முதன் முதலில்
என் வீடு தாண்டி
அறிமுகமான
முதல் உறவும் நீ தான்!

நிலாவை பத்திரமா பார்த்துக்கோ
சொல்லிப் போன
உன் தந்தை திரும்பியது
நாம் பேசுவதை கேட்காத
பதில் சொல்லாத நிலையில் தான்!

உன் குடும்பமும் உறவுகளும்
அழுதிருக்க..
என்னோடு நீ நிலா வரைந்து
பழகிய நிமிடங்கள்
நீங்காமல் நினைவில்
நிறைந்திருக்கு!

அந்த நொடி முதல்
நீயும் என் உறவாகிப் போனாய்
அந்த நிலவைப் போல..

# சிகப்பு நிலா..

அப்போது தான் பார்க்கிறேன்
அம்பதுக்கும் மேற்பட்ட அழைப்புகள்!
அத்தனையும் அவளிடமிருந்து..

உள்ளுக்குள் கொஞ்சம் அச்சம்
திரும்பி அழைத்திட..
அழைத்தேன்..
கட்டளைகள் பிறப்பிக்கிறாள்..
வெளியே வரச் சொல்லி..

வந்து பார்த்தால்..
வானத்தில் நிலவு
இரத்தச் சிவப்பில்..

பிறகு ஆரம்பிக்கிறாள்..
அதன் வரலாற்றை..
அதன் அறிவியலை..
பிறகென்ன..
இன்றைய இரவும்..
நிலவோடும் அவளோடும் தான்!

# தேவ வேட்டை

நடுவினில் அவன்.
மூவரும் அவன் முன்னே..
கோட்டையும் கட்டியாச்சு
காவலாளிகள் போட்டாச்சு
அரசவையில் அனைவரும் கூடியாச்சு
கதை கேட்க எங்களோடு
நிலவும் வானுக்கு வந்தாச்சு!

காட்சிகள் தயாராகியாச்சு..

காட்சி ஒன்று..

நாங்கள் மூவரும்
நரமாமிசமுன்னும் தேவதைகளாயாச்சு!
அவனெங்களுக்கு ஆணையிடும்
அழிவில்லா தேவனாகியாச்சு!

அவன் ஆணைப்படி..
மூத்த தேவதை
நான் போனேன் வேட்டையாட..
ஒரு காவலாளியை
கட்சிதமாய் வேட்டையாடி வந்தேன்!

வேட்டையாடி வந்ததை
அவன் ஆணைப்படி..
கடைசி தேவதைக்கு கொடுத்தேன்!
வேட்டையாடும் வித்தைகளை
சொல்லிக் கொடுத்தபடி!

பல நாள் பசியிலிருந்த
குட்டி தேவதை..
காவலாளியை கச்சிதமாய்
உண்டு முடித்தாள்!
இன்னும் பசியோடு விழித்தாள்!
அவளை அமைதிப் படுத்தினேன்!

அகோரப் பசி தான் எனக்கும்
ஆனாலும் பொறுத்துக் கொண்டேன்!
அவள் தேவ குணத்திற்கு அஞ்சியும்..
அடுத்த வாய்ப்பு இருந்ததாலும்
எனக்கான நரமாமிசம் கிட்டும்
அந்த நம்பிக்கையினாலும்!

காட்சி இரண்டு...

இரண்டாம் தேவதை
வேட்டைக்குப் புறப்பட்டாள்..
அவளுக்கான ஆணைகளை
அவனே பிறப்பித்தான்!

ஆணைகளை ஏற்று..
இரண்டு காவலாளிகளை..
கொண்டு வந்தாள்..
பங்கிட்டு..
இருவரும் உண்டு முடித்தோம்!

மேகங்கள் நிலவிற்கு
திரை போட்ட நேரம்..
எங்களுக்குள் திட்டங்கள் தீட்டினோம்!
கோட்டையிலுள்ள யாவரையும்
வேட்டையாட..
ஆனால் அவனிடம் அது நடக்காது!
மேகங்களை விலக்கி விட்டு
நிலவு வந்தது..
அவன் ஒற்றைப் பார்வையிலே!

காட்சி மூன்று

திட்டப்படி..
இது குட்டித் தேவதையின்
வாய்ப்பு..

தானே செல்வதாய்
அவனே சென்று..
மூன்று உடலோடு திரும்பினான்!

நிலவைப் பார்த்தவன்..
எங்கள் முகத்தைப் பார்த்தவன்..
மூவருக்கும் பங்கிட்டு விட்டு..
குட்டித் தேவதையிடம்
மாபெரும் வேட்டை பற்றி
விளக்கிச் சொன்னான்!
அவள் அத்தனைக்கும்
தலையாட்டி வைத்தாள்!

திட்டப்படி..
மூவரும் தயாரானோம்..
இம்முறை.. மந்திரிகள் மூவரும்
எங்கள் வசமென புறப்பட்டோம்!

காவலாளிகள் இல்லாக் கோட்டையை..
வானத்து நிலவு மட்டும்
கண்காணித்து கொண்டிருக்க..
ஒரே நொடியில்..
மூவரையும் தூக்கி வந்தோம்!

மந்திரிகள் கொளுத்திருந்தார்கள்!
அகலத்திறந்த.. வாய்க்கும் பத்தாமல்
நன்றாய் கொளுத்திருந்தார்கள்!
கொஞ்சம் கொஞ்சமாய்
கடித்து தின்று முடித்தோம்!

வயிறு நிறைவதாய்
ஒரு நினைப்பு வந்ததும்..
குட்டி தேவதை..
வாய் விட்டுச் சிரித்தாள்!
ஹா.. ஹா.. ஹா..

வெற்றிக் களிப்பில்
நானும் சிரித்தேன்!
என்னோடு..
என் இளைய தேவதையும்
இணைந்து கொண்டாள்!
மூவரும் சிரித்தோம்..
ஹா.. ஹா.. ஹா..

மூர்க்கன் அவன்..
இன்னும் திட்டங்கள் தீட்டினான்!

காட்சி நான்கு

அவனுக்கு புதுத் தகவல்
கிடைத்திருந்தது..
அவன் ஆழ்ந்த சிந்தனையில்
அக்கோட்டையை நோக்கியபடி
கவனித்திருந்தான்..

இன்னும் சில மணித்துளிகளில்
அரசியும் அரசனும்..
எங்களுக்கு உணவாகப் போகிறார்கள்!
நாங்கள் மூவரும் தயாராகி இருந்தோம்!

அவன் எங்களை எச்சரித்தான்..

ஒரு நொடியில்..
நிலவு மறைந்தது..
எங்கள் கண்கள் இருண்டன..
கோட்டைச் சுவர்களும்
அரண்மனையும்..
நாலு அரக்கர்களாய் மாறி
அரசனையும் அரசியையும்
காக்க முன் வந்தார்கள்!

இப்போது..
இன்னொரு வியூகம்
வகுத்துக் கொடுத்தான்..
அதன் படி..
நாங்கள் மூவரும் வீழ்த்தினோம்
முதல் அரக்கனை!
அவன் மட்டும்
மூன்று அரக்கர்களுடன்..
போராடிக் கொண்டிருந்தான்!

இந்த இடைவெளியில்..
அரசனையும் அரசியையும்
குட்டி தேவதையும்
இளைய தேவதையும்
வெற்றி கொள்ள..

நான் அவனுக்குதவ ஓடினேன்!
அவன் அதற்குள்..
இருவரை வீழ்த்தி இருந்தான்..
இருவரும் சேர்ந்து..
அனைவரின் கதையை முடித்தோம்!

காட்சி ஐந்து..

வெற்றிக் களிப்பில்..
மூவரும் கூக்குரலிட்டோம்..
ஓங்கிச் சிரித்தோம்..
ஹா.. ஹா.. ஹா..
ஹா.. ஹா.. ஹா..
எங்கள் சிரிப்புக்கு அஞ்சி
நிலவு மேகங்களுக்கு பின்
ஒளிந்து பார்த்தது!

ஆளுக்கு இருவராய்..
பங்கிட்டு கொடுத்தான்!
குட்டி தேவதை..
வயிறு நிறைந்திருந்ததால்..
தனக்கு ஒன்று போதுமென
இளைய தேவதைக்கு கொடுத்து
உண்ணச் சொன்னாள்!

அவள் தனக்கும் ஒன்று
போதுமென்றாள்..
எனக்கும் ஒன்று போதுமென்று..
அவன் வேட்டையாடிய..
மூன்று அரக்கர்களையும்
அவனிடமே கொடுத்தோம்!

மூவரையும் பார்த்து
நமட்டுச் சிரிப்போடு..
மூன்று அரக்கர்களையும்
மூன்று வாயில் முழுங்கினான்!
முழுங்கியவன்..
தாகம் தீர்க்க..
அங்கு சேர்த்து வைத்திருந்த
அத்தனை இரத்தத்தையும்
குடித்து முடித்தான்!

காட்சி ஆறு

குட்டி தேவதைக்கும்..
ஏன் எங்களுக்கும்
உண்ட மயக்கமானது..
சுவர்களில்லா..
அந்த வானக் கூரையின் கீழே..
அழகிய மெத்தைகள்
அவன் படைக்க..
அதன் மேலே..
கண்ணயர்ந்தோம்!

காட்சிகள் நிறைவாகியாச்சு!

கோட்டையும்.. காவலாளிகளும்..
அரசவையும்.. அமைச்சர்களும்..
அரசனும் அரசியும்
உருவெடுக்க..
உணவு கொண்டு வந்த
அந்த சிறு கிண்ணத்தையும்
வீட்டிலிருந்த ஒரே தட்டையும்
உதிரம் கொடுத்த நீர் குவளையும் சுமந்து..
அகோர பசியில்லா அரக்கன்
அடுத்தடுத்த அடியெடுத்து வைக்கிறான்!

அவனுக்கு அகோர பசியில்லா
வரம் தந்த..
அரக்கனுக்கும் அரக்கிக்கும்
உதிரம் கொடுக்க நீர் குவளை
தேவை என்பதறிந்து!

இரண்டாவது அடியெடுத்து வைக்கையிலே..
மூன்று தேவதைகளும்
முணுமுணுக்கிறார்கள்..
அண்ணா..
நாளைக்கும் நாம..
வேட்டைக்கு போவோமா?

அந்த அரைக்கிண்ணத்தில்
மீந்த உணவளித்தவரை
நினைத்தபடி..
அவன் முன்னேறுகிறான்!
அகோரப்பசியில்லா..
அவன் முன்னோரை நோக்கி!

அந்த நிலவொளியில்..
மூன்று தேவதைகளும் தூங்க..
வயிறு நிறைந்து தூங்க..
மெய் மறந்து அங்கேயே
நின்றிருக்கு அந்த நிலவு..
மாதத்தில் எப்போதாவது கிட்டும்
அந்த காட்சியில் தானும் நிறைந்து!

அவன் திரும்புகிறான்..
இன்னொரு கூட்டாஞ்சோறு..
இன்னொரு தேவ வேட்டைக்கு..
இன்னொரு கதைக்கான காட்சிகளை..
யோசித்தபடி கண் மூடுகிறான்!

நிலவும் இருள்கிறது..

கனவுலகில்
அவன் வேட்டையை தொடர்கிறான்!
கதைகளைப் போல்
கனவுலகிலும் அவனே படைக்கிறான்!

[பல முறை கண்ணீர் சிந்த வைத்த ஒரு வார்த்தைக் கோர்வை, கூட்டாஞ்சோறு எனப் பெயரிடப்பட்டு பின்பு தேவ வேட்டை என புதிய தலைப்பிடப்பட்டது]

ஆண்டு தோறும் மூன்று மில்லியன் 5 வயதிற்குட்பட்ட குழந்தைகள் சரியான உணவு கிடைக்காததால் மாண்டு போகிறார்கள் - உலக சுகாதார நிறுவனம்

# நீயெனக்கு! நானுனக்கு!

விரைந்து விலகும் மேகம்
என் வருகை கண்டு தானே!
மறைந்திருக்க நீ நினைத்தாலும்
ஆகாது என் நிலவே!
நீ எனக்கு.. நான் உனக்கு!
இது தானே நியதி!

# மேகத்திற்காகாது

உனை மறைத்து மேகங்கள்
நமை பிரிக்கப் பார்க்குது!
அவற்றின் நிலை அறியாமல்
தானே மறைந்து போகுது..
உனக்கும் எனக்குமிடையே
யாருண்டு நிலவே?

# கவலை விடு என் நிலவே!

ஆளில்லா வீதியிலே
அழகு நிலா வானத்திலே!!
மறைக்க நினைக்கும் மேகங்களே
காற்றோடு காற்றாய் போவீர்களே!

கவலை விடு.. என் நிலவே..
நானிருக்கும் வரை..
நானுக்கிருப்பேன்..
கவலை விடு.. என் நிலவே..
நமக்கிடையே யாருமில்லை..
கவலை விடு என் நிலவே!

# சொல்லாயோ என் நிலவே!

நான் வரைந்தாலும்
நீ இருப்பாய்!
நான் மறைந்தாலும்
நீ இருப்பாய்!
உன்னோடு பயணித்த
பயணிகள் எத்தனை பேரோ?
அதில் நீ பயணிக்க விரும்பிய
பயணிகள் எத்தனை பேரோ?
என் நிலவே!

# உங்களைப் பிடிக்கும்!

உன்னைப் பிடிக்கும்
உன்னைப் பாடும்
அவனையும் பிடிக்கும்!

உன்னைப் போல் அவனும்
என் சொல்லைக் கேட்பதில்லை!

இருந்தும் வாழ்ந்திருக்கிறேன்
நித்தம் நீ வருவாய் என்ற
நம்பிக்கையிலும்!
நாளும் அவன் படைப்பான்
ஒரு நிலவுக் கவிதை என்ற
பேராசையிலும்!

அமாவாசை இரவில்
நீ பொய்த்தாலும்..
அவன் பொய்ப்பதில்லை
ஒரு நிலவுக் கவிதை படைக்க!

ஆகையால்..
முதலில் அறிமுகமான
உன்னைப் பிடிக்கும்..
உன்னைப் பாடும் அவனை
என் உணர்வைப் பாடும் அவனை
உயிரினும் பிடிக்கும்
என் உயிரினும் பிடிக்கும்!

# மதியும் அவனும் மதியும்

அலுவலகம் முடிந்து
அதே சாலையில் தான்
அன்றும் நடந்து வருகிறேன்!
அங்கு கூட்டங்கள் நிறைந்திருந்தாலும்
அனைவருமே தனித்தனியாய்
அவரவர் உலகோடும் உறவோடும்
அப்படியே பயணிக்க..

என் உலகான..
என் தாய்க்கு அழைக்கிறேன்!
நாளில் நடந்த கதை சொல்லி
நான் நடந்து வருகையிலே..

நிலவோடு பேசி
எனைக் கடக்கிறான் அவன்!
நிமிடங்கள் மௌனமாகிறேன்..
என் உலகம் தாண்டி
இன்னொரு உலகுக்குள்
எனை அறியாமல்
அவன் அழைக்க..
அதைத் தவிர்த்து..
மீள்கிறேன்.. என் உலகுக்குள்!

மீண்டாலும்..
என் மௌனங்கள் தொடருது..
என் உலகில்..
அன்னையும் கேட்கிறாள்..
அவன் யாரென்று?
அவன் சொன்ன வார்த்தைகளில்
என் பெயரும் வந்ததே!
இல்லையம்மா..
யாரோ.. நிலவைப் பாடுகிறார்கள்..

பதில் சொல்லி முடித்து..
கைபேசி அழைப்பை முடித்து..
அவனைத் தேடுகிறேன்!

அவன் கூட்டத்தில்
தொலைந்து விட்டான்!
குளிர் ஒளி வீசும் நிலவோ
அவன் முகம் தேட
தாண்டியபடி ஆகாயத்தில் மிதந்தது!

நிலா என்ற பெயரை மாற்றி
மதி என வைத்தேன்!
அவன் இரண்டையும் இணைத்து
கவி பாடிப் போகிறான்!

யார் அவன்?
என் பெயர் தெரிந்தவனோ?
என்னை அறிந்தவனோ?
வினாக்களோடு விரைகிறேன்!

பேருந்து நிறுத்தத்தில்..
காத்திருக்கிறான் அவனும்..
கவிதைகள் பாடியபடியே!
அத்தனையும் அவன் கைபேசியில்
பதிவாகி கொண்டிருக்கு!

மெதுவாய் திரும்பிப் பார்க்கிறேன்!
பேருந்து வருகையிலும்
வானத்து நிலவினிலும்
அவன் நிறைந்து கிடக்கிறான்!
இடையில் நானெப்படித் தெரிவேன்?

அவனைத் தவிர்த்து..
அவன் வரிகளைத் தவிர்த்து..
நானும் நிலவைப் பார்க்க
முயல்கிறேன்..
முடியாமல் திணறுகிறேன்!

குரல் தவிர்க்க..
தூரம் செல்கிறேன்..
கூட்டத்தில் தொலைகிறேன்..
ஆனாலும் அவன் குரல் கேட்குது!
அவன் பாடி முடிக்க வேண்டுமென
ஒரு மனம் வேண்டிட..
முடிக்க கூடாதென
மறுமனம் வேண்டிட..
இரட்டைக்கொல்லியாய் பற்றி எரிகிறேன்!

பாடி முடிக்கிறான்..
ஒரு வழியாய்
என்னை விடுதலை செய்கிறான்!
உண்மையில்..
அவன் போகும் பேருந்து..
அங்கே வந்து விட்டது!

சுதாரிக்கவில்லை என்றால்
நானும் அப்பேருந்தில் போயிருப்பேன்!
குறைந்தது அவன் பெயராவது
அறிந்து திரும்பியிருப்பேன்!
அவன் போன பின்னே..
அத்தனை பிதற்றலும் தொடருது..
எனக்குள்ளே..
என்னைப் பார்த்து நகைக்குது
என் நிழலும் என் நிலவும்..

பத்து நிமிடங்களுக்கு மேலாகியும்
என் இதயத்தின் படபடப்பு தொடர்கிறது..
முதன் முதலாய் ஓர் புது உணர்வு
மடை மாற்ற முயன்றும் முடியாமல்
அவன் சென்ற திசை நோக்கி
என் தலை திரும்புவதை..
தவிர்க்க முடியாமல் தவிக்கிறேன்!

கைபேசி எடுத்து..
என் உலகத்திடம் கேட்க..
உள்ளம் ஏங்கினாலும்..
ஏதோ ஒன்று எனைத் தடுக்க..
அவன் கடைசியில் சொன்ன வார்த்தைகள்
கவனத்தில் வந்திட..
இணையத்தில் தேடுகிறேன்..
"நிலவும் நீயும் நானும்"

அவன் கிடைத்து விட்டான்..
அவன் என் கிடைத்து விட்டது!
உடனே சேமித்துக் கொள்கிறேன்!
புத்தகத்திற்காக..
பதினான்கு பிப்ரவரி வரை..
காத்திருக்கலாகாது!

தலைப்பொன்றை அனுப்புகிறேன்
வாசகர் விருப்பப் பகுதிக்காக..
நன்றி சொல்லி..
குறுஞ்செய்தி வந்து சேருது..
நம்பிக்கையோடு என் பயணம்
நான் துவங்குகிறேன்!
நானும் அவனும் நிலவும்!

காலையில்..
என் மின்னஞ்சலில்
அவன் கவிதை..
என் விருப்பத்திற்காக..

நேற்று எனக்கு நடந்த
அத்தனையும் உட்பொருளாய்
நான் மட்டும் அறியப் பாடியுள்ளான்!
அவன் ஆசுகவியோ?
ஒற்றைச் சொல்லுக்கு..
வாழ்வைப் பாடும்
வித்தைகள் கற்றவனோ?

காணாமல் எப்படி எழுதினான்
எனக்குள் நிகழ்ந்ததை!
மறுபடி மறுபடி வாசிக்கிறேன்!
மதி மயங்கி மயங்கி சுவாசிக்கிறேன்!
யார் அவன்?
மனம் படிக்கும் மந்திரம் தெரிந்தவனோ?

மீண்டும் அந்த வீதியிலே
அவனைப் பார்ப்பேனோ?
அவனிடம் பேசுவேனோ?
என்ன பேச? எப்படி துவங்க?
என கேள்விகள் என்னில் நிறைந்து
என்னை மூச்சு முட்டச் செய்ய..

மதியிழந்து..
அவன் எண்ணுக்கு அழைக்கிறேன்..
துண்டிக்க விரல்கள் முயன்றாலும்..
அவன் ஏற்கட்டும் என மனம் வேண்டுது
அவன் குரலுக்கு காதுகள் காத்திருக்கு..
அவன் ஏற்பானோ?
மதியாகிப் போன நிலாவின் அழைப்பை!

# கடல் கடக்கும் தூதுவன்

ஒரு நாள் தாமதமாகலாம்
ஆனாலும் தவறாமல்
என் செய்தி வந்து சேர்க்கும்
கடல் கடந்து திரவியம் தேடும் உன்னிடம்
நம் பூமி தாண்டிய முதல் உறவு..
பூமியின் ஒற்றை உறவு
நம் நிலவு!

# நிலவும் நிலாவும் நானும்

நிலவுக் கவிதைகளால்
நீயெனக்கு அறிமுகம்!
நிலவால் தான்
உன் இல்லம் அறிமுகம்!

முழு பௌர்ணமி நாளொன்றுக்கு
நானழைக்கப் பட்டிருந்தேன்
கூட்டாஞ்சோறு உண்ண..

குழந்தைகள் நாங்கள்
கூட்டாஞ்சோற்றை களித்திருக்க..
நீ மட்டும் நிலவுடன்
நிமிடமும் இடைவெளியின்றி
இனிமையாய் பேசி கொண்டிருந்தாய்!

அன்றைய உன் பேச்சுகள்..
இன்றைய உன் கவிதைகளாய்!
நிலவு வளர்ந்தும் தேய்ந்தும்
நம்மோடு வந்தது..

நாம் மட்டும் வளர்ந்து வளர்ந்து
நம் வாழ்நாட்களை தேய்த்தோம்!

முதல் நாளிலிருந்து
உன்னைப் பிடிக்கும்..
நீ இடைவிடாது..
என்னோடு உறவாடுவதால்..
உன் கவிதைகளால்..

என் பெயர் மதியென
உனக்குத் தெரியாது தான்!

உன் கவிதைகளை..
உன் தாய் சொல்லக் கேட்டிருக்கிறேன்!
நீயில்லா வேளையிலே
உன் அறை வந்து..
உன் கையெழுத்தில் படித்திருக்கிறேன்!

இரவெல்லாம் மொட்டை மாடியில்
நீ பாடும் நிலவுக் கவிதைகளை
நீ அறியாமல் கேட்டிருக்கிறேன்!

மூவாறு ஆண்டுகள்
ஓடோடி விட்டன..
பதினான்கு பிப்ரவரி..
"நிலவும் நீயும் நானும்"
உன் நூல் வெளியீட்டு விழா..
நீ அழைக்கவில்லை!
உன் தாயழைத்து வருகிறேன்!

அந்த அனுமதியும்
என் வீட்டிலிருந்து அனுமதியும்
மறுக்க முடியாமல் கிட்டியதே!

கூட்டத்தில் நீ மட்டும்
என் கண்களை விட்டு..
சிந்தையை விட்டு..
நீங்கவே இல்லை!

பலரின் உரைகளிலும்
என்னை உன்னோடு இணைக்கிறார்கள்!
நிலாக் காதலன் என்று
நிலாக் கவிஞன் என்று
நிலாப் பிரியன் என்று..
பட்டியல் நீள நீள..
என் உள்ளம் படபடக்குது!

உன் அம்மாவின்
கரம் பிடித்துக் கொள்கிறேன்!
தந்தையில்லா பிள்ளை
உன்னை நான்..
உன் அன்னையிடம்
கேட்கத்தான் போகிறேன்!
நீ மறுத்தாலும் உன் வாழ்வில்
நான் வரத்தான் போகிறேன்!

என் எண்ணங்களை..
என் கரங்கள் சொல்லுமோ?
உன் அன்னையிடம்..
பாவம் அவைகளுக்கு வாயில்லை!
என் வாயிலோ வார்த்தையில்லை!

ஏற்புரைக்கு நீ வருகிறாய்..
அனைவருக்கும் நன்றி கூறுகிறாய்..
ஏதேதோ.. பேசுகிறாய்..
தவறியும் என் பெயரை
உன் உதடுகள் உச்சரிக்கவில்லை!
புத்தகத்தின் தலைப்பையும் சொல்ல
தவிர்த்து விட்டாய்!

நான் இன்னும் என் மனம்
சொல்லவில்லை.. யாரிடமும்!
அதற்குள் உனக்கெப்படித் தெரியும்?
உன் தவிர்ப்புகள் என் தவிப்பை
கூட்டி என்னை கூண்டிலிட..
கண் நீர்.. அனுமதியின்றி..
உன் அன்னையின் கரங்களையும்
நனைத்தது!

என் கரங்கள் சொல்லாததை
என் உதடுகள் சொல்லாததை
என் கண்ணீர் சொன்னதோ?

உன் அழைப்பேற்று
உன் அன்னையும் மேடை வருகிறார்..
மரியாதைகளை ஏற்று..
வாழ்த்துகிறார்..
"நிலாவும் நீயும் நானும்"
சிறப்பாய் வாழ
எல்லாம் வல்ல இறை அருளட்டும்!

அவர் என்ன சொன்னார்?
அவர் என்ன சொன்னார்?
என் நெஞ்சம் ஒரு நொடி நின்று
மறுபடியும் கேட்குது..
"நிலாவும் நீயும் நானும்"..
"நிலாவும் நீயும் நானும்"..

அவள் கனவு நினைவாக
நிமிடங்கள் உறைந்திருந்தாள்!

திரும்பிய அன்னையின்
கால் தொட்டு
வணங்கிக் கொண்டாள்!

கவலை விடு நிலா..
உங்க வீட்ல நான் பேசுகிறேன்!
இத்தனை போதாதா?

பூத்த புன்னகை பூவிதழில்
பனித்துளியாய்..
பனி கோர்த்த பாமாலையாய்
கண்ணீர் மறுபடியும்
அவள் அனுமதியின்றி
வழிந்தோடியது!

மனதின் ஓட்டத்தை
மனம் அறியும்!
வாழ்வின் வழிகளை
வாழ்வே சொல்லும்!

"நிலவும் நீயும் நானும்"
புத்தகத்தை கையிலேந்தி
நிலா ஓடினாள்..
அவனின் கையெழுத்து வாங்க!

"எழுத்துக்கள் வாசிக்கமட்டுமல்ல
சுவாசிக்கவும் தான்.."

என்றும் அன்புடன்
கருவெளி ராச.மகேந்திரன்

கையெழுத்திட்டு..
மதியின் சுவாசத்தை துவங்கி வைத்தான்..

"வேறு யாரு பெயரையும் போட்டா சண்டைக்கு வந்துடுவாங்கனு இந்தப் பேரையே பயன்படுத்தி இருக்கேன், நீங்கள் விரும்பினால் உங்களுக்குப் பிடித்த பெயரைப் போட்டு வாசித்துக் கொள்ளலாம். அதற்கு எந்தத் தடையுமில்லை"

# கடலோடியின் நிலாக் காதல்

நடுக்கடல் தாண்டியாச்சு
அவ நெனப்பு தாண்டலையே!
நினைக்க மறக்காம நானிருக்க..
நிலாவு வானத்த கடக்கலையே!

அடுத்த வீட்டுலதா அவ இருக்கா..
ஆனாலும் அவகிட்ட நான் பேசலையே!

விண்மீனை விட்டு..
கடல் மீனப் பிடிச்சு..
காலையில திரும்பையில..
கூட்டத்தோட அவ வந்து..
கூடையில அள்ளிப் போவா..
துள்ளிக்குதிக்கு(ம்) மீனோட..
துடிதுடிக்கு(ம்) எ(ன்) இதயத்தைய(ம்)..

அடுத்த வீட்டுலதா அவ இருக்கா..
ஆசையா அவகிட்ட ஒரு வார்த்த பேசலையே!

அப்பப்ப அவ வந்து
ஆசையா அவ உதிர்க்கு(ம்) புன்னகை!
அப்படியே அத நா(ன்)
அந்த வானத்து நிலவுக்கு..
நித்த கடனாக வாங்கிப் போவே..

அடுத்த வீட்டுலதா அவ இருக்கா..
அவ புகுந்த வீடு ஆவதெப்போ என் வீடு!
அடுத்த வீட்டுலதா.. அவ இருக்கா..
அந்த நினப்போட தான்.. நானிருக்கே!

இந்தக் கவிதையை பாடலாக்கும் பணியும் திட்டத்தில் உள்ளது, விரைவில் உங்களை வந்து சேரும் பாடலும்.

# நிலவும் நிலாவும் நானும்

அந்தக் குரல்..
அது அறிமுகமில்லாதது..
அந்த வார்த்தைகள்
அவை நேற்று எழுதியவை!

இன்னும் வெளியிடவுமில்லை..
அதற்குள் எப்படி?
அவசரமாய் தேடுகிறேன்
எழுதிய கையேட்டை..

ஆம்! அதே வரிகள்..
வீட்டில் யாரிடம் கேட்பது!
அந்த அறைக்குள்
ஆள் வந்து போன..
அறிகுறிகளும் இல்லை!

பொறுமை இழந்து..
அறையின் சன்னல் திறக்கிறேன்
குரல் வரும் திசை பார்க்கிறேன்!
குரல் மட்டும் வருகிறது!
முகம் காட்ட வரவேயில்லை!

முழுக்கவிதையும் முடித்து..
ஒரு பெருமூச்சும்..
அமைதியாய்.. அழுத்தமாய்
ஒரு முத்தமும்..
என் செவியில் விழுகிறது!

இதயம் படபடக்க..
சன்னலை மூடிக் கொண்டேன்!
பிரச்சனையில் மாட்டியதாய்
மனம் படபடத்தபடியே..

மெல்லச் சென்று..
அம்மாவிடம் விசாரிக்கிறேன்..
அறைக்கு யாரேனும்..
வந்தார்களா என்று?
நினைவிலில்லை.. என்கிறார்!
தந்தையிடமும் அதே பதில்!
தங்கையும் அப்படியே வாயசைத்தாள்!

பெருங்குழப்பத்துடன்
மறுபடியும் அறை வந்தேன்!
மடிக்கணினியை திறந்தேன்..
அந்நிகழ்வை கவியாக்கி முடித்தேன்!

திகில் தீராமல் விழித்திருக்கையில்..
அதே குரல்.. அதே கவிதையை..
மறுபடியும் குரலெடுத்து படித்தது!
இம்முறை சன்னலை திறக்க
மனம் படபடத்தாலும்..
மறுப்பு தெரிவித்து..
அடுத்த கவிதையை தொடர்ந்தேன்!

நிலானு..
உங்க கல்லூரிப் பொண்ணு
காலையில வந்திட்டு போச்சு..
பக்கத்து வீட்டுக்கு இன்னைக்குத்தா
குடி வந்தாங்க..
நல்லா பாடுது..
அம்மா முடிப்பதற்குள்..

நிலாவா?
அப்படி யாரும் எங்க வகுப்புல
இல்லையேமா!
இப்பத்தான் சேர்ந்திருக்காம்..

ஓ அப்படியா!

எப்படித் தேடியும்..
அப்படி ஒரு பேரில்
எனக்கு தெரிந்திருக்கவில்லை..
எவரையும்..

சரிம்மா..
யாரு வந்தாலும்..
இந்த அறைக்குள்ள விடாதீங்க!

எழுதி முடித்து..
கண்கள் மூடுகிறேன்!

மீண்டும் அதே குரல்..
தன் குரலெடுத்துப் பாடுது..
வேறொரு கவிதையை!
ஐந்து ஆண்டுகளுக்கு முன்
நான் எழுதிய அதே வரிகள்..

அதை அறிந்த
ஒரு ஜீவன் தான்..
உலகத்திலிருக்க கூடும்
என்னைத் தவிர..

அந்தக் குரல் எனக்கு
அறிமுகமாகிறது!

மீண்டும் இதயம் படபடக்க..
கண்கள் விழிக்கிறேன்!
அந்தக் குரல் ஓய்வதாயில்லை!
எழுந்து என் சாளரம் திறக்கிறேன்!

கண்களில் நீர் வடிய..
கவிதைகளை முணுமுணுத்தபடி..
கம்பிகளுக்குப் பின்னே..
கைகளை நீட்டியபடி நிற்கிறாள்!

அந்த வரிகள் அவளுக்கு..
அவள் கேட்க..
அவளுக்காக மட்டும்
எங்கள் கல்லூரி நாட்களில்
நான் எழுதிய வரிகள்!

இதுவரை வார்த்தைகளால்
வாழ்ந்திருந்த..
என்னிடமும் வார்த்தைகளில்லை!
எழுதித் தந்த அந்த வார்த்தைகளால்
வாழ்ந்திருந்த அவளும்..
கண்டதும் மௌனமானாள்!

பத்தாண்டுகள் கடந்து ஓர் சந்திப்பு..
கண்ணீர் மட்டும் உரையாட
உறைந்திருக்கிறோம்!

நானே வருவேன் என்றவள்..
என் முன்னே வந்து நிற்கிறாள்!
இனியும் நாழிகைகளை..
நான் கடத்தலாகாது!

உடனே வெளியேறுகிறேன்
அறை விட்டு..
அவள் வந்து விட்ட செய்தியை
அனைவரிடமும் சொல்ல..

வெளியேறிய எனக்குத்தான்..
இன்ப அதிர்ச்சி..
ஒளியேற்றி.. கைதட்டி..
அனைவரும் வரவேற்க..

நிலா வந்திட்டா..
என் குரல் கனத்திருந்தது..
கண்கள் நனைந்திருந்தன..

நான் தான் சொன்னேனே..
அப்பவே..
நிலா காலையிலேயே வந்துட்டா..
அம்மாவைக் கட்டிக் கொண்டு..
அழுது முடித்தேன்..
அவள் பிரிவை!
ஒற்றை மனுசியாய்..
அவள் போராட்டத்தை..

பெற்றோரின் அனுமதி
பெற்றிருந்தது..
அவளுக்கான காத்திருப்பை..
அற்புதமாக்கியிருந்தது..

அனைவரின் ஆசி வாங்கி..
மொட்டை மாடி ஓடினேன்!
மௌனமாய் நின்றிருந்தோம்..
ஐந்து ஆண்டுகளுக்கு முன்னே
வரைந்த அந்த வார்த்தைகளை
அதே நிலவின் கீழே நின்று
வாசித்தோம்.. நிலாவும் நானும்..

இந்தக் கவிதைக்கான தொடர் கவிதையும் எங்கோ மறைந்திருக்கு, ஏதோ ஒரு தொகுப்பில் மறைந்திருக்கு.. தேடி கண்டு பிடிப்பது உங்கள் திறமை..

# இந்த நிலா விதிவிலக்கு

சுவர்களில்லா
வானக்கூரையின் கீழே..
நிலவில்லா
வானம் பார்த்து..
வானுயர்ந்த மலையின்
உச்சியிலே..
நான் மட்டும் படுத்திருந்தேன்!

கண்களில் மின்னி மின்னி
மறைந்தது விண்மீன்!
கடினமாய் விழிகள் திறந்தேன்!
கால்களை அசைக்கவும்
முடியாமல் கிடந்தேன்!
மற்றவர்கள் நிலையென்ன?
திடீரென மூளை விழித்துக் கொண்டது!

சில மணி நேரங்களுக்கு முன்னே..

அது எங்கள் முதல் பயணமென்பதால்..
அதுவும் முதல் பயணத்திலேயே
விரும்பியபடியும்.. அதற்கு மேலாகவும்
பனிப்பொழிவை சந்தித்து விட்டோம் என்பதாலும்
மிகுந்த குதூகலத்துடன் இருந்தோம்!

இரண்டு நாட்களை இழந்து விட்டோம்..
அதையும் சேர்த்தே அடுத்த மூன்று நாட்களில்
நாங்கள் பயணிக்க வேண்டும்!
இதுவும் காலையில் பனிப் பொழிவு
எங்களுக்காக நின்றால் தான்!

பல்வேறு திட்டங்கள் தீட்டியபடியே..
இரவு உணவை முடித்தோம்!
பிழைத்து வந்தால் தான் சாகசம்..
இல்லையென்றால்..
அதைச் சொல்ல வார்த்தைகள் இல்லை!

மனதுக்குள் யாரிடமும் சொல்ல இயலா
ஒரு அச்சம் பிடித்திருந்தது..
அது அனைவரின் முகத்திலும் தெரிந்தது!
ஆனாலும் சிரித்தே மறைத்தோம்!

அங்கும் கைபேசி ஒலித்தது!
பனியை படம் பிடிக்க..
சேர்த்து வைத்திருந்த
அத்தனை சக்தியையும்..
பயன்படுத்திக் கொண்டிருந்த..
அந்த வேளையில்..

நிலாவின் வீட்டிலிருந்து தான்..
நிலநடுக்கமும் பனிச்சரிவும் ஏற்பட்டு
பல பேர் மாண்டதாய்
தொலைக்காட்சிகளில் செய்தி பார்த்து
அழைத்ததாய் நலம் விசாரித்தனர்!
அவள் எத்தனை சமாதானம் சொல்லியும்
அவர்கள் நம்பவில்லை..
கடைசியில் கைபேசி என் கை வந்தது!

நிலாவின் அனுபவத்திற்காகவே..
இந்தப் பயணம் என்றாலும்..
நான் போகிறேன் என்றே..
அவளை அனுப்பி இருந்தார்கள்..

இதுவரைக்கும் ஒரு முறையும்..
அவர்கள் என்னைப் பார்த்ததில்லை..
இருந்தும் நிலா சொல்லும் கதைகளால்
அவர்களுக்கு நான் நாயகன் தான்!

பல விசயங்களை சொல்லி..
ஒரு வழியாக சமாதானம் செய்தேன்!
திரும்பும் போது..
வீட்டுக்கு வரும்படி அழைத்தார்கள்!

அய்யகோ..
அவளில்லாமல் எப்படிப் போவேன்?
அவள் வீட்டுக்கு..

என் கால்களை இழுத்துப் பார்த்தேன்!
அவை இருப்பதாக எனக்கு தெரியவேயில்லை!
கண் காணும் தூரமெல்லாம்.. பனியே..
கைக்கடிகாரம் நாங்கள் புறப்படுவதாய்
திட்டமிட்டிருந்த ஐந்து மணி என்றது!

அக்கணத்தில் என்னைத் தவிர
அங்கு யாரும் இருப்பதாய்
ஒரு அடையாளமும் இல்லை!

நிலாவின் பெற்றோர்களிடம்
வருவதாய் உறுதியளித்து விட்டு..
அவளைப் பார்த்தேன்..
பௌர்ணமி இரவிலும்
நிலவுக்கு சவால் விடும்
அவள் முகம்..
அமாவாசை இரவில்..
அந்த இடத்தை ஒளியால்
நிரப்பிக் கொண்டிருந்தது!

என் சம்மத்ததால்..
அவள் புரிந்துத் தான் போயிருந்தாள்!
அவள் என்னை நோக்கி..
ஓரடி வைக்கையிலே..
அவள் கண்கள் மிரண்டன..

இன்னும் இரண்டு அடிகளில்
என்னிடம் இருந்திருப்பாள்..
அடுத்த அடி எடுப்பதற்குள்..
என்னிடமிருந்து தூரமானாள்!

அவள் நின்றிருந்த
பனிப்பாறை கீழே சரிந்திட..
நான் நின்றிருந்த இடம்
இடப்புறம் பயணிக்கத் துவங்கியது!

அவள் குரல்..
அட! அத்தனையும் என் தவறு!
அவள் சொல் கேட்டிருக்கக் கூடாது!
அவளை உடன் அழைத்து
இதுவரை வந்திருக்கவும் கூடாது!

முதல் கதிரொளி பட்டு..
பவளமாய்.. தங்கமாய்..
வைரமாய்..
மின்னுகின்றன மலை முகடுகள்!
அவள் வந்தது
இத்தனையும் காணத்தான்!
அதற்குள்ளே..
அய்யகோ..
ஓங்கி குரலெழுப்ப முயல்கிறேன்!
காற்றும் வரவில்லை!

கைக்கடிகாரம்..
நேரம் ஏழு ஆனதாய் சொல்லுது!
அசைந்த ஒரு கை கொண்டு..
என்னை நானே விடுவிக்க
இடைவிடாது முயல்கிறேன்!

என் காதுகள் கேட்பது
உண்மையா?
அவளது குரல்..
ஆம்! நான் இப்போதே
மரித்தும் போகலாம்!
அவள் குரல் அருகில் வருது!
முதன் முதலாய்
அகிலத்தின் அனைத்து சக்திகளுக்கும்
நன்றியை சொல்லிக் கொள்கிறேன்!

இவளே..
என்னோடு.. எனக்காக..
எப்போதும்.. தன் வாழ்நாளின்
நிமிடங்களனைத்தையும்
வாழ்ந்து வாழ்ந்து களிப்பவள்!
என்னால் தன் நாளிகைகளை
முன் வந்து இழந்தவள்!
அத்தனையும் தாண்டி..
எனக்கு இருமுறை..
உயிர் கொடுத்தவள்!
இன்று என்னால்.. என் முடிவால்..
தன் வாழ்வையும் இழந்தாளோ?
அஞ்சி தவித்தவனின்
அச்சம் தவிர்த்தபடி அவள் குரல்
அருகினில் வந்து சேருது!

ஒளி வட்டமாய்..
அவள் பின்னால் கதிரவன்..
அவளை தேவதையாக்குகிறது!

அருகில் வந்து என்னை..
பனிக்குவியலிலிருந்து மீட்டெடுக்கிறாள்!
தண்ணீர் கொடுத்து..
முகத்தில் நீரடித்து.. கேட்கிறாள்!
நிலா எங்கே?

தெளிந்த நினைவில்
தெளிந்த கண்களில் காண்கிறேன்..
என் முன்னே நிலாவின் தோழி..

ஏன் தெளிந்தேனென்று தோன்றியது!
அவள் தன் சக்தியெல்லாம் திரட்டி
என்னை அமர வைக்கிறாள்..
பனிக்குவியலில் சாய்ந்தபடி!

என் கண்களை அகலத் திறக்கிறேன்..
தூரத்தில் இரு நிழல்கள்..
அவளிடம் சைகயில் சொல்கிறேன்!
இருவரில்லை.. மூவர்..
அவர்களிலிருவரும்..
மூன்றாமவளை தூக்கிக் கொண்டு
வருகிறார்கள்!

தொங்கிக் கொண்டு வரும்
அந்தக் கரம்..
கடைசியாய் என் கரம் கேட்டு நீண்ட
அதே கரம்!
கதறி அழத் துடித்தும்..
குரலின்றி உள்ளுக்குள் அழுகிறேன்!

அவளது தோழி..
எழுந்து ஓடுகிறாள்..
எழவும் முடியாமல்..
குரலெழுப்பவும் முடியாமல்..
இன்னும் ஏன் வாழ்கிறேனோ?

நால்வரும் அருகில்..
வந்து சேர்ந்தார்கள்..
அவள் நிலா இல்லை..
ஆனால் அவள் அணிந்திருந்தது
நிலாவின் கையுறை!

ஒரே கேள்வி தான்..
மத்தவங்கள பார்த்தீங்களா?

நிலாவத்தான கேட்கிற..
அதோ பாரு.. வரா
கம்பீரமாய்..
களமாடும் வீராங்கனையாய்
மூவரின் பைகளைத் தூக்கியபடி
முன்னே வருகிறாள்!

பைகளை கண்டுபிடிக்க
கொஞ்சம் நேரமாயிடுச்சுப்பா?
உன்னையும் தான் தேடினோம்!
அனைவரும் உயிரோடிருக்கிறோம்!
அப்போதே உயிர் வந்தது எனக்கு!

அப்போதே அவளும் கவனித்தாள்..
என் கால்களை..
அடுத்த நொடி..
நான் அவளாக
அவளுக்குள் என்னை புதைத்து
கதறி அழுகிறாள்..
தேற்ற என்னை விட்டால்..
அக்கணம் வேறு யாருமில்லை!

புறப்படும் முன் அவள் சொன்ன..
நையாண்டியைச் சொன்னேன்..
தேம்பித் தேம்பி அழுதபடி..
சிரிக்கிறாள்..
அப்படினா, உன்னோட சாப்பாடும்
எனக்குத்தான்..
மீண்டும் நிலாவாகி விட்டாள்..
உடன்பாடு கையெழுத்தானது..
என்னை இழுத்துச் செல்ல வேண்டியது
இனி அவள் பொறுப்பு..

பனியில்லா ஐந்து தின தூரம்..
பனி நிறைந்த மூன்று நாட்கள் மீதம்..
அவள் கையில்.. பொறுப்பாய்
கால்களிழந்த நான்!
துவங்கினாள் பயணத்தை!

யார் உதவியும் கோராமல்..
அத்தனை உதவிகளையும் தவிர்த்து..
மூன்றாம் முறையாய்..
என் உயிர் காத்து..
என்னுடனே வருகிறாள்!
யார் இந்த நிலா?
அவளைப் பற்றி
இன்னொரு முறை சொல்கிறேன்!

தடைகள் பல கடந்து..
என்னை உயிரோடு
மீட்டு வந்தாள்..
மூன்று நாளும் இரவும்..
மூன்று பிறவியாய் கடந்தது!
என்னால் அவள் படும்
துயரம் கண்டு..

இதற்கா அவளை..
இதுவரை கூட்டி வந்தேன்!
நாங்கள் வந்து சேரும் முன்னே
வாகனமும் மருத்துவர்களும்
வரவேற்க காத்திருந்தார்கள்!
வலியால் நானும்..
என்னால் அவளும்..
கண்ணயரவே இல்லை!

மருத்துவமனையில்..
மருத்துவர்கள் உறுதியளித்ததுமே!
இடம் மாறிந்து..
இரைச்சல் செய்தாள்!
நிலா இரைச்சலிடுமோ?
இந்த நிலா விதிவிலக்கு!

கால தாமதத்தை
வீட்டுக்கு சொல்லியாச்சு!
காரணம் பனிப் பொழிவுதான்!
காயமல்ல..

சரியானதும்
நேரா வீட்டிற்குப் போகலாம்..
என் நெற்றியில்..
நிலா வரைந்தபடி..
ஐந்து நாள் நிகழ்வுகளை..
கதை கதையாய் சொல்லியபடி
என்னருகே இருக்கிறாள்!
நிலா இருக்கும் நினைவில்..
நான் கண் மூடுகிறேன்!

நிலவும் நிலாவும் நானும்!

# நிலாவொரு மாயை

பன்னிரண்டு பேரும்
பன்னிரெண்டாயிரம் அடி உயரத்தில்
பனி மலைகள் சூழ்ந்திருக்க
பௌர்ணமி நிலவை இரசித்திருக்கோம்!

நிலா மட்டும் மெல்லமாய்
என்னருகில் வருகிறாள்!
அவளுக்குப் பிடித்த..
நிலாக் கவிதைகள் கேட்கத்தான்!

அவளை எனக்கு
அறிமுகம் செய்ததும்
நிலவுக் கவிதைகள் தான்!
அந்த நினைவுகளுக்கும்..
கடந்த கால நிகழ்வுகளுக்கும்
இன்னொரு முறை செல்வோம்!

பூனை நடை போட்டு
அவள் அருகினில் வருகிறாள்!
அனைவரும் அசந்து தூங்குவதாய்
அவளுக்குள்ளே ஓர் நம்பிக்கை!
அதை ஏன் கெடுப்பானே என்று
நானும் கண்களை மூடிக் கொண்டேன்!

காதோரம் வந்து..
கவிஞரே என்கிறாள்..
கண் விழித்துத் தான் ஆகவேண்டும்
இருந்தும் விழி திறக்காமலே
நொடிகளைக் கடத்தினேன்!

பொறுமையிழந்து
ஏதேனும் செய்வதற்குள்..
விழித்து விடுவேன்!
இன்னொரு முறை அழைத்தாள்..
கவிஞரே!

இன்னொரு முறைக்காக
நான் காத்திருக்கையில்..
அவள் வாய் திறக்கையில்..
அவளோடு அனைவருமே சேர்ந்தனர்..
அத்தனை உயரத்தில்..
அனைவருடனும் அந்த மலைகளும்
தானே கூட்டணி சேர்ந்தன!

அவள் வெட்கித் தான் போனாள்..
விழித்த நான்..
தெரியாதது போல்..
விழித்துக் கொண்டே தான் இருந்தேன்!
என்னாச்சு..? ஏதாவது பிரச்சனையா?

கூட்டமாய் கூச்சலிட்டார்கள்..
நிலாவுக்கு கவிஞர் வேணுமாம்..
அனைவரையும்..
ஒற்றைக் குரலில் அடக்கினாள்!
இமயமலையின் உயரங்கள்..
நிலவொளியில் சொர்க்கமாய் இருக்குமாமே?
இது அவள்!

புரிந்து விட்டது..
வெளியே கூப்பிடுகிறாள்!
நடக்கட்டும் என்றபடி..
அனைவரும் சாய்ந்து கொண்டார்கள்!
சூழல் மாறிக் கொண்டே இருக்கும்
அந்தச் சூழலில் அவளுடன்
அவளுக்காக வெளியேறினேன்!

வெளியேறியதும் கேட்டேன்..
ஆயிரம் முறை கேட்டிருப்பேன்..
இருந்தும் இன்னொரு முறை கேட்டேன்..
ஒரு புத்தகத்தை படித்து விட்டு
உடன் பயணிக்க துவங்கியது நியாயமா?
"நிலவும் நீயும் நானும்"
அந்த புத்தகம் தான்
அவளை என்னிடம் கொண்டு வந்து சேர்த்தது!

முகம் பார்த்து..
முகம் மலர்ந்தவள்..
எப்போதும் போல் பதிலின்றி..

கவிஞரே..
நாளை செல்ல வேண்டிய
இடத்தைக் காட்டி..
அது ஜொலிக்கும் அழகை காட்டி..
அதன் பின் இருக்கும் இருளை காட்டி
கவிதை ஒன்று கேட்கிறாள்!

"வானத்தில் ஓர் நிலவிருக்க..
என் அருகினில் ஒரு நிலா இருக்க..
இடையில் நிழலாய்
நிழலின் இருளாய் நானிருக்க..
பாடத்தான் வேண்டுமோ கவி!"

பாடிக் கொண்டிருக்கையில்..
சத்தமின்றி..
வட்ட நிலவொன்றை..
அதே குளிர்ச்சியோடு..
என் நெற்றியில் வரைகிறாள்!
பிரித்தாள்.. இன்னும் இருக்குகிறாள்!

எழுதுவதில் எனக்கும்..
என் எழுத்துக்களில் அவளுக்கும்
பித்துப் பிடித்திருந்தது!

அவள் மெதுவாய்..
மிக மெதுவாய்..
என் எழுத்துக்களுக்குள்
வர முயல்கிறாள்!

இது என்னிலிருந்தவை!

என் எழுத்தெல்லாம்
அவள் தான் என்றெண்ணி
அவள் வாழ்கிறாள்!

அவள் தாய் சொல்லித்தான்
அவள் கதை எனக்குத் தெரியும்!

"நிலவும் நீயும் நானும்"
யாருமில்லா என் வாழ்வுக்குள்..
இந்த நிலாவைக் கொண்டு வந்தது!

அவளைக் காக்கவும்
அவளிடம் என்னைக் காக்கவும்
வார்த்தைகள் இருக்கு..
பாவம்.. என் வார்த்தைகளுக்கு
பிரிக்கத் தான் தெரியாது!

சில கவிதைகள் சொல்ல..
மடி கேட்டு சாய்கிறாள்!
என் முகம் பார்த்தபடி..
வானம் பார்க்கிறாள்!
கவிஞரே..
என் வாழ்க்கையை
எப்போ உங்ககிட்ட சொன்னேன்?

முதல் முதலாய்
அவசியமான கேள்வி ஒன்றை
என்னிடம் கேட்கிறாள்!

பதிலின்றி..
அவளைப் பார்த்து சிரிக்கிறேன்!
நிலவின் ஒளியில்
நிலாவின் விழிகள்
இன்னொரு காவியம் படைக்கலாம்
அதை விடுங்கள்!

நீங்க சொல்ல மாட்டீங்க!
எனக்குத் தெரியும்..
கேட்டுப் பார்த்தேன்!
சொல்லிக் கொண்டு..
அவளே சிரித்துக் கொண்டாள்!

திரும்புகையில்..
இப்பயணம் முடித்து
திரும்புகையில்..
இந்தப் பயணம் அவளை
அவள் குடும்பத்திற்கு தருமென
நம்பியே அத்தனைக்கும்
சம்மதித்தேன்!

உறைய வைக்கும் குளிர் காற்று
உடனே உள்ளே செல் என்றது!
வழிகாட்டியும் வெளியே வந்தழைத்தார்!
விருப்பமில்லாமலே நிலாவும் சம்மதித்தாள்!

என் வாழ்க்கைக்கு வேறு பொருள்
எழுதிக் கொண்டிருந்தாள் அவள்!
என்னருகிலே படுத்து விட்டாள்..
ஒருவரிடத்தில் இருவர்..
மெதுவாய் கூட்டத்தை நகர்த்தினேன்!
அவள் அங்கம் விலகுவதாயில்லை!

"நிலவும் நீயும் நானும்.."
கவிதைத் தொகுப்பிலிருந்து..
கதையாகிக் கொண்டிருந்தது!
அடுத்த கதை எனக்குள்ளே
உருவாகிக் கொண்டிருந்தது!

மனம் படைக்கும் மாயையை
வாழ்வென்று..
எழுதுவது வேறு!
அதை வாழ்வது வேறு!
நிலவும் என்னருகே நிலாவும்..

வாழ்கிறேன்!
மனத்தின் வலிமையை
அது படைக்கும் மாயையை..
என் கண் முன்னே கண்டபடி!

(இந்த நிலாவைப் பற்றியும் இன்னொரு கவிதைக்குள் தகவல்கள் நிறைந்து கிடக்கு, மாயை கடந்து கண்டு பிடிப்பது உங்கள் திறமை)

நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 4 ல் சந்திப்போம்

## **கல்விக்கு உதவலாமே!**

அன்புடையீர்,

உங்கள் அனைவருக்கும் எனது இதயம் கனிந்த வணக்கங்களும் வாழ்த்துக்களும். தொடர்ந்து வாசித்து ஆதரவளித்து வருவதற்கு நன்றி.

இந்த வார்த்தைக் கோர்வைகள் உங்களுக்கு பிடித்திருந்தால்..

**உங்களிடம் ஒரு விண்ணப்பத்தை வைக்கிறேன், அது மிகவும் முக்கியமானது மற்றும் அவசியமானது. இன்றைய சூழலில் கல்வியின் அவசியத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். தற்சமயம் இந்த வரிகளை நான் எழுதி முடிப்பதை சாத்தியப்படுத்தியதும், நீங்கள் வாசித்துக் கொண்டிருப்பதற்கும் அதுவே காரணம், அத்தகைய அடிப்படை பலன் அனைவருக்கும் கிடைத்திட வேண்டுமென நீங்கள் கருதினால்..**

- **குறைந்தது ஏதேனும் ஒரு அரசுப்பள்ளி மாணவனுக்கோ / மாணவிக்கோ அவர்கள் படிப்புக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவிடுங்கள்**
- **ஏதேனும் ஒரு ஏழை மாணவனுக்கோ / மாணவிக்கோ கல்லூரியில் படிக்க உதவிடுங்கள்**
- **உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அரசுப்பள்ளி மாணவ – மாணவியருக்கு ஏதேனும் ஒரு வகையில் வழிகாட்டிடுங்கள்**
- **அரசுப் பள்ளிகள் மேலும் சிறப்பாக செயல்பட எந்த வகையிலேனும் உதவிடுங்கள்**

மேற்கூறிய வேண்டுகோள்கள் நிறைவேற்றப்பட வேண்டியவை எனக் கருதினால் தொடர்ந்து பலரிடமும் இந்த வேண்டுகோளை நீங்களும் பகிர்ந்து கொள்ளுங்கள்!

படைப்புகள் பற்றிய உங்கள் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் எண்ணங்கள் என்னை வந்து சேர இந்த மின்னஞ்சல் முகவரியை பயன்படுத்தவும்.

**karuveli.mahendran@gmail.com**

தங்கள் ஆதரவுக்கு மீண்டும் நன்றி!

அன்புடன்

கருவெளி ராச.மகேந்திரன்

## இணைந்திருக்க சில வழிகள் :

https://www.karuveli.wordpress.com | **மின்னஞ்சல்** : karuveli.mahendran@gmail.com

**கைபேசி எண்** : 94455 28556 | **படைப்புகளை உங்கள் மின்னஞ்சலில் பெற்றிட ஒரு முறை பதிவு செய்து கொண்டால் போதுமானது.** https://goo.gl/LC2dTD

## யூ- டியூப் சேனல்கள்:

**கருவெளி** : https://goo.gl/pSYy8Y

**ஊமைகளின் குரல்** : https://goo.gl/qXn34p

**மீயுசிக்கா** : https://goo.gl/v33JY9

## உதவிட விரும்பினால்:

நீங்கள் உதவ விரும்பியும் உங்களால் சரியான மாணவரையோ, பள்ளியையோ, தேவைப்படும் நபர்களையோ கண்டறிய இயலாமல் போனால் என்னைத் தொடர்பு கொள்ளவும். என்னால் இயன்றவரை என்னிடமுள்ள தகவல்களை பகிர்கிறேன்.

விலையின்றி அனைவரும் படிக்கவும் பகிரவும் வழிவகுக்கும் "**கிரியேட்டிவ் காமன்ஸ்**" உரிமம் மூலமாக தொடர்ந்து பல படைப்புகளை வெளியிடும் இந்த முயற்சிக்காக நீங்கள் உங்கள் பங்களிப்பை செய்திட விரும்பினால், எனது வங்கிக் கணக்கு விபரங்களை பின்வரும் முகவரியில் பெற்றிடுங்கள். இது, **முழுவதும் உங்கள் சுய விருப்பத்தின் அடிப்படையில் செய்யப்படும் பங்களிப்பாக இருக்க வேண்டும் என்பது எனது மனமார்ந்த வேண்டுகோள்.** *நேர் வழியில் / நியாயமான முறையில் சம்பாதிக்காத பணம் எதையும் அனுப்ப வேண்டாம் என்றும் வேண்டிக் கொள்கிறேன். எனது இந்த வேண்டுகோளை ஏற்றவர்கள் மட்டும் படைப்புக்காக உங்கள் பங்களிப்பை செய்தால் போதுமானது.*

நன்கொடையளிக்க விரும்புவோர் **இங்கே சொடுக்கவும்**

அல்லது இந்த முகவரியை பயன்படுத்துங்கள் http://bit.ly/Donate2Karuveli

*அன்புடனும் வாழ்த்துகளுடனும்*

*கருவெளி ராச. மகேந்திரன்*

## என்னைப் பற்றி

மேற்குத் தொடர்ச்சி மலையின் பிரமாண்டத்தை தினந்தோறும் இரசிக்க வாய்ப்பிருக்கும், இவ்வுயிர் அழிந்தால் ஐந்தாறு ஆண்டுகளில் மனித இனம் அழிந்து போகுமென்ற புகழ் பெற்ற உயிரின் பெயர் கொண்ட "தேனி"யில் வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்கு பெற்றோரால் வைக்கப்பட்ட பெயர் மகேந்திரன். எனக்கு விபரம் தெரிந்து, என் தேடல் துவங்கிய நாள் முதலாய், எனது எழுத்துகள் மூலம் நான் பதிவு செய்யத் துவங்கிய நாள் முதலாய் கரு = ஆதியானது, வெளி = எல்லையற்றது, என்ற இரு சொற்களை இணைத்து "கருவெளி" அத்துடன் என் பெற்றோர் பெயரின் முதல் எழுத்துக்களை இணைத்து "கருவெளி" ராச. மகேந்திரன் என்ற பெயரில் எழுதி வருகிறேன்.

ஏறக்குறைய 15 ஆண்டுகள் காற்றாலை நிறுவனங்களில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி துறை, செயல்திறன் கண்காணிப்பு மற்றும் மேலாண்மை துறைகளில், பல்வேறு மட்டங்களில் பணியாற்றி விட்டு தற்சமயம் முழு நேரம் எழுத்துப் பணியோடு, கிராமப்புற மாணவ மாணவியர், அரசுப்பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்கு என்னாலான அறிவுப்பகிர்வைச் செய்து கொண்டிருக்கிறேன்.

மிகச் சமீபத்தில் கற்றுக் கொண்ட ஒலி, ஒளி மற்றும் இசை சம்பந்தமான அறிவினை சமூகத்திற்கு பயனளிக்கும் வகையில் பல வடிவங்களில் கொண்டு வரும் முயற்சியை துவங்கி உள்ளேன். தற்சமயம் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க, கவிதைகள் அனுபவப் பகிர்வுகளுக்காக "கருவெளி ராச.மகேந்திரன்", பொது மக்களுக்குப் பயன்படும் அரசு மற்றும் அரசு சார் தகவல்களை பகிர்ந்திட "ஊமைகளின் குரல்" மற்றும் இசைக்காக "மியூசிக்கா" எனும் மூன்று யூடியூப் சேனல்களையும் ஆரம்பித்து தகவல்களை பரிமாறி வருகிறேன்.

மேலும் பல முயற்சிகளை சமூக பங்களிக்கும் வகையில் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் இயற்கையோடு என் வாழ்க்கை பயணம் தொடர்கிறது. உங்களைப் போலவே என்னைப் பற்றி நானும் அறிந்து கொள்ள நிறைய விசயங்கள் இருக்கின்றன. வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

*அன்புடன் - கருவெளி ராச.மகேந்திரன்*



**அன்புடையீர்**

உங்களில் பலர் கவிதை வாசிக்கும் பழக்கமுடையவர்களாக இருக்கலாம். சிலர் கவிதை பைத்தியங்களாகக் கூட இருக்கலாம். வெளி உலகுடன் வாய் விட்டுப் பேசும் பழக்கம் குறைவாக உள்ளதால் எழுதத் துவங்கி என் முதல் உறவாகிவிட்ட கவிதைகளும், கதைகளும், இசையும் கற்பனையாய் நின்று விடக்கூடாதென்ற எண்ணம் நான் எழுதும் ஒவ்வொரு கணத்திலும் என்னை அந்த விழிப்பு நிலைக்கு திருப்பிக் கொண்டே இருக்கும்.

*"நிலவும் நீயும் நானும்"* தொகுப்பு மூன்றில் உங்களுக்கு ஒரு எச்சரிக்கை விடுக்கப்படும், கவிதைகள் வாசிக்கும் முன்னே எந்த ஆசிரியரும் செய்யாத ஒரு செயலை நான் செய்வதற்கு ஒரு முக்கியக் காரணமுண்டு. அதனை நீங்கள் ஒவ்வொரு தொகுப்பாய் படிக்கும் போது தானே உங்களுக்குப் புரிந்து விடும்.

மூன்றாம் தொகுப்பான இந்தப் புத்தகத்தில் நீங்கள் பல்வேறு உணர்வுகள் கடந்து வர வேண்டிய சூழல் நிச்சயம் அமையும். அதில் நீங்கள் இரசிக்கக் கூடியதும், வர்ணிக்கக் கூடியதும், அஞ்சி விலகக் கூடியதும், கண்ணீர் வடிக்கக் கூடியதும், காதலாகிக் கசியக் கூடியதும், புதிருக்குள் சிக்கித் தவிக்கக் கூடியதும், சிந்தித்து செயல் படக் கூடியதும் நிறைந்து கிடக்கும் என்பது மட்டும் உறுதி.

**"நிலவும் நீயும் நானும்"** ஏற்கனவே மூன்று பாகங்களை கடந்து விட்டாலும், நான்காம் பாகத்திற்கான வெளியீட்டு நாள் இதுவென்று எனக்குள் ஏற்கனவே விதைத்து விட்டது. விரைவில் நான்காம் பாகத்துடன் உங்களை சந்திக்கிறேன்.

மூன்றாம் பாகத்தை வாசித்து விட்டு உங்கள் உணர்வுகளை பகிர்ந்து கொள்ளுங்கள், அனுபவங்களை பகிர்ந்து கொள்ளுங்கள். யார் கண்டார்.. "நிலா" அல்லது "மதி" போன்று உங்கள் வாழ்வையும் "நிலவும் நீயும் நானும்" உங்கள் கண் முன்னே கொண்டு வந்து செல்லலாம்.

தொடர்ந்து பயணிப்போம்...

**"கருவெளி" ராச.மகேந்திரன்**

கருவெளி கலையகம் வெளியீடு | 94455 28556 | கருவெளி ராச.மகேந்திரன்